தெய்வமே துணை.

# விவேகசிந்தாமணி.



அலலல்போம் வலவினைபோ மன்னைவயிற் றிற்பிறந்த
தொலலைபோம் போகாத் துயரம்போம்-நல்ல
குணமதிக மாமருணைக் கோபுரத்துள் மேவுங்
கணபதியைக் கைதொழுதக் கால். (௧)

சாத்திரத்தா லளவுபடாத் தனிமுதலைப் பராபரத்தைத் தானேதானாய், மாத்திரமாய்நிற்பதனை வாய்விட்டுப்பேசாத மௌனவைப்பைக், காத்திரவாதனைகடந்த வறிஞருக்குபபல மீயுங் கற்பகத்தைப், பார்த்தவிடந்தொறுநிகழும் பரமரகசிய பபொருளைப் பணிதலசெய்வாம. (௨)

ஆபத்துக்குதவாபபிள்ளை யரும்பசிக்குதவா வன்னந்
தாபத்தைத்தீராத்தண்ணீர் தரித்திரமறியாப்பெண்டிர்
கோபத்தையடக்காவேந்தன் குருமொழிகொள்ளாச்சீடன
பாபத்தைத்தீராத்தீர்த்தம் பயனிலலையேழுந்தானே. (௩)

சந்திரனில்லாவானந் தாமரையில்லாப்பொய்கை
மந்திரியில்லாவேந்தன் மதகரியில்லாச்சேனை
சுந்தரப்புலவரிலலாத் தொல்சபைசுதரில்வாழ்வு
தந்திகளில்லாவீணை தனமிலாமங்கைபோலாம். (௪)

மூப்பிலாக்குமரிவாழ்க்கை முனையிலாவரசன்வீரங்
காப்பிலாவிளைந்தபூமி கரையிலாதிருந்தவேரி (னம்
* கோப்பிலான்கொண்டகோலங் குருவிலான்கொண்டஞா
ஆப்பிலாச்சகடுபோல வழியுமென்றுரைக்கலாமே. (௫)

பிள்ளைதான்வயதின்மூத்தாற் பிதாவின்சொற்புத்திகேளான்
கள்ளினற்குழலாள்மூத்தாற் கணவனைக்கருதிப்பாராள்
தெள்ளறவித்தைகற்றுற் சீடனுங்குருவைத்தேடான்
உள்ளநோய்பிணிகடீர்ந்தா லுலகர்பண்டிதரைத்தேடார் (௬)

ஆலகாலவிடத்தையுநம்பலாம் பாற்றையும்பெருங் காற்றையுநம்பலாங், கோலமாமதயானையைநம்பலாங் கொல்லும் வேங்கைப்புலியையுநம்பலாங், காலனார்விடுதூதரைநம்பலாங் கள்ளர்வேடர்மறவரைநம்பலாஞ், சேலைகட்டியமாதரைநம்பினாற் றெருவினின்றுதியங்கித்தவிப்பரே. (௭)

கல்லாதமாந்தரையுங் கடும்போர்த்துரைகளையுங் காலந்தேர்ந்து, சொல்லாதவமைச்சரையுந் தூயாச்சுதவாத்தேவரையுஞ் சுருதிநூலில், வல்லாவந்தணர்தமையுங் கொண்டவனையெந்நாளும் வலதுபேசி, நல்லார்போலருகிருக்கு மனைவியையுமொருநாளு நம்பொணாதே. (௮)

அத்தியினமலரும்வெள்ளை யாக்கைகொள்காக்கைதானும்
பித்தர்தம்மனமுநீரிற் பிறந்தமீன்பாதந்தானும்
அத்தன்மால்பிரமதேவ னளவிடப்பட்டாலுஞ்
சித்திரவிழியார்நெஞ்சந்தெரிந்தவரில்லைகண்டீர். (௯)

* கோப்பு-குணம்.

படியினப்பொழுதேவதைத்திடும் பச்சைநாவியைநம்பலாம், பழிநமக்கெனவழிமறித்திடும் பழையபீலியைநம்பலாங், கொடுமதக்குவ டெனவளர்ந்திடு குஞ்சரத்தையு நம்பலாங், குலுங்கப்பேசிநகைத்திடுஞ்சிறு குமரர்தம்மையுநம்பலாங், கடையிலக்கமுமெழுதிவிட்ட கணக்கர்தம்மையுநம்பலாங், காக்கைபோல்விழி பார்த்திடுங்குடிக் காணியாளரைநம்பலாம், நடைகுலுக்கியுமுகமினிக்கியு நகைநகைத்திடுமாதரை, நம்பொணுதுமெய் நம்பொணுதுமெய் நம்பொணுதுமெய் காணுமே. (௧0)

எத்தொழிலைச்செய்தாலு மேதவத்தைப்பட்டாலும்
முத்தர்மனமிருக்குமோனத்தே-வித்தகமாய்க்
கூத்திவிளையாடியிரு கைவீசிவந்தாலும்
தாதிமனநீர்க்குடத்தே தான். (௧௧)

சோரமணையாட்டிமிகச் சோரபிரான்மேனம்மையாய்ச்
சேரத்தொழில்செய்யுந் திட்டம்போல்-பேர்பெரியர்
அத்தனடிமேன்மனத்தை யாறுதுவைத்துகந்தே
எத்தொழிலுஞ்செய்வ ரிசைந்து. (௧௨)

மாவினுலிருவரும் மருவிமாசிலாப்
பாலனைப்பயந்தபின் படிப்பியாதுயர்
தாலமேற்செல்வமா வளர்த்தல்தங்கட்கோர்
காலனைவளர்க்கின்ற காட்சிபோலுமால். (௧௩)

தீதுநன்றறிகிலாச் சேயரொன்செய்வார்
கோதறவவரைநன் னெறியிற்கூட்டிடா

நேதங்களவர்முன்செய் திழிவைக்கற்பிக்கும்
தாதைதாய்புதல்வர்க்குச் சத்துருக்களே. (௧௪)

மைந்தனைப்பெறு கின்றதுமாசிலாப்
புந்தியன்பொடு போற்றிவளர்ப்பது
தந்தைமாண்டபின் தம்முறைக்கேற்பன
அந்தமில்கடனாற்று நற்கேயன்றே. (௧௫)

நிட்டூரமாக நிதிதேடுமன்னவனும
இட்டதனைமெச்சா விரப்போனும்-முட்டவே
கூசிநிலைநிலலாக் குலக்கொடியுங்கூசிய
வெசியுங்கெட்டு விடும். (௧௬)

தனனுடன்பிறவாத்தம்பிதனைப்பெறுந்தாயார்தந்தை
அன்னியரிடத்துச்செலவமருப்பொருள்வேசியாசை
மனனியவேட்டின்கல்விமறுமனையாட்டி வாழ்க்கை
இன்னவாங்கருமமெட்டுமிடுக்கத்துக்குதவாவன்றே. (௧௭)

அரவினையாட்டுவாரு மருநகளிறேற்றுவாரும்
இரவினிற்றனிப்போவாரு மெரிநீர்நீந்துவாரும
விரைசெறிகுழலியான வேசையைவிரும்புவாரும்
அரசனைப்பகைத்திட்டாரு மாருயிரிழப்பர்மாதோ. (௧௮)

கடன்படுபிதாவுமெங்குங் கண்டவர்தங்கட்கெல்லாம்
உடன்படுமன்னைதானு முயர்ந்திடும்ரூபந்தானே
அடர்ந்திடும்பாரிவித்தை யப்பியாசமிலாப்பிள்ளை
நடங்கணுமிவர்களுன்குஞ் சத்துருவாருமன்றே. (௧௯)

ஏசியிடலி னிடாமையேநன்றெதிரிற்
பேசுமனையாளிற் பேய்நன்று-நேசமிலா
வங்கணத்தினன்று வலியபகைவாழ்வில்லாச்
சங்கடத்திற்சாவதே நன்று. (உ0)

மாடில்லான்வாழ்வு மதியில்லாவாணிபமும்
நாடில்லான்செங்கோ னடாத்துவதும்-கூடும்
குருவில்லாவித்தை குணமில்லாப்பெண்டும்
விருந்தில்லாவீடும் விழல். (உக)

நேசனைக்காணவிடத்து நெஞ்சாரவேதுதித்தல்
ஆசானையெவ்விடத்து மப்படியே-வாச
மனையாளைப்பஞ்சணையில் மைந்தர்தமைநெஞ்சில்
வினையாளை வேலைமுடிவில். (உஉ)

துர்ச்சனரும்பொன்னுந் துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்கு மாயிழையும்-நச்சரவும்
மண்டித்தவெள்ளுங் கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கன்றோ சயம். (உங)

அருந்தொழிலாற்றும் பகடுந்திருந்திய
மெய்ந்நிறைந்துநீடிருந்த கன்னியும்-நொந்து
நெறிமாறிவந்த விருந்துமிம்மூவர்
பெறுமாறரிய பொருள். (உச)

தனையளித்தா டைமையன்மனைகுருவின்
பன்னியரசன் பயிமேறவி-தன்மனையைப்

பெற்றுளிவரையே பேசிலெவருக்கும்
நற்றுயரென்றே நவில். (உரு)

குருவுபதேசமாதர் கூடியவின்பந்தன்பால்
மருவியநியாயங்கல்வி வயதுதான்செய்ததன்மம்
அரியமந்திரம்விசார மாண்மையிங்கிவைகளெல்லாம்
ஒருவருந்தெரியவொண்ணு துரைத்திடிலழிந்துபோமே. உ௬

மந்திரந்தன்னைப்பிறரவமதித்தல்மகளிரைச்சேர்தல்வஞ்சனைதன், நந்தலிலாயுள்பிறந்தநாளில்லி னண்ணியகுற்றநீணிதிய, முந்தியகற்பின்மனைவிதன்குணங்கண் மொழிந்தவிவ்வொன்பதுமாவி, சிந்துறவரினும்பிறரொடுமொழித நீதெனவுரைத்தனர்தெளிந்தோர். (உஎ)

தகுதிகொள்கடனக் கடன்றனைத்திர்த்த முன்பொருள்கோடல்பின்பகர்தல், மகளிரைக்கொடுத்தல் தன்னுடையொழுக்க மரபினிற்புரிந்ததன்பாவம், புகலருமயலோர் நற்குணமென்னப் புகன்றவிவ்வொன்பதுமெவர்க்கு, மிகலறமறையாதுரைத்திடலொழுக்கத் தியல்பெனமொழிவர் நன்குணர்ந்தோர். (உஅ)

தந்தையுரைதட்டினவன் றயுரையிகழ்ந்தோன
அந்தமுறுதேசிகர்த மாணையைமறந்தோன்
வந்தமுறைவேதநெறி மாறினவனுல்வர்
செந்தழலின்வாயினிடை சேர்வதுமெய்கண்டீர். (உ௯)

குக்கலைப்பிடித்துநாவிக் கூண்டினிலடைத்துவைத்து
மிக்கதோர்மஞ்சள்பூசி மிகுமணஞ்செய்தாலுந்தான்

அக்குலம்வேறதாமோ வதன்மணம்புனுகுண்டாமோ
குக்கலேகுக்கலல்லாற் குலந்தனிற்பெரியதாமோ. (௩0)

பொருளிலார்க்கின்பமில்லை புண்ணியமில்லையென்று
மருவியகீர்த்தியில்லை மைந்தரிற்பெருமையில்லை
கருதியகருமமில்லை கதிபெறவழியுமில்லை
பெருநிலந்தனிற்சஞ்சாரப் பிரேதமாய்த்திரிகுவாரே. (௩௧)

பொன்னொடுமணியுண்டானாற் புலையனுங்கிளைஞரென்று
தன்னையும்புகழ்ந்துகொண்டு சாதியின்மணமுஞ்செய்வர்
மன்னராயிருந்தபேர்கள் வகைகெட்டுப்போவராயிற்
பின்னையுமாரோவென்று பேசுவாரேசுவாரே. (௩௨)

மண்டலத்தோர்கள்செய்த பாவமன்னவரைச்சேரும்
திண்டிறல்மன்னர்செய்த தீங்குமந்திரியைச்சேரும்
தொண்டர்கள்செய்ததோடந் தொடர்ந்துதங்குருவைச்சேரு
ம், கண்டனமொழியாள்செய்தகர்மமுங்கணவற்காமே. (௩௩)

நற்பொருளறத்தையின்ப நலத்தைஞானத்தைமிக்க
பற்பலருறவைநட்பைப்பகைதவிர்த்திடுந்திறத்தை
சொற்பெரும்புகழையென்றுந் துகளிலாப்பெருமைதன்னைப்
பொற்புறுங்கதியையெல்லாம பொருளலாற்றருவதின்றே. ()

தண்டுகொண் டோட்டினும்போகாதுநம்மைத்தரிசிக்க வே, பண்டுவந்தோர்க்கின்று தாம்பூலம்வைத்துப் பரிந்தழைத்தும், திண்டுமிட்டுஞ்சொல்லி வாராதொழிந்தனர் செய்கையெல்லாம், கண்டுகொண்டோமினித் தொண்டுகொண்டோ நங்கடவுளுக்கே. (௩௫)

நாய்வாலையளவெடுத்துப்பெருக்கித்திட்டி னற்றமிழை யெழுதவெழுத்தாணியாமோ, பேய்வாழுஞ் சுடுகாட்டைப பெருக்கித்தள்ளிப்பெரியவிளக்கேற்றிவைத்தால்வீடதாமோ, தாய்வார்த்தைக்கேளாதசகசண்டிக்கென்சாற்றிடினுமுழுத்த குணந்தவிரமாட்டான், ஈவாரையீயவொட்டா திவனுமீயா னெழுபிறப்பினுங்கடையா மிவன்பிறப்பே. (கசு)

பொருட்பாலைவிரும்புவர்கள் காமப்பாலிடைமூழ்கிப்புர ள்வர்கீர்த்தி, யருட்பாலாமறப்பாலைக் கனவிலுமேவிரும்பார்க ளறிவொன்றில்லார், குருப்பாலக்கடவுளர்பால் வேதியர்பாற் புரவலர்பாற் கொடுக்கக்கோரார், செருப்பாலேயடிப்பவர்க்கு விருப்பாலேகோடிசெம்பொன் சேவித்திவார். (கஎ)

கட்டியடிப்போர்க்குங் கன்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்கு மீவரே-திட்டமுடன்
பாடுவோர்க்கீயாரே பன்னுதிரத்தாடையினிற்
போடுவோர்க்கீவார்பொருள். (கஅ)

வண்டுகளிருந்திடின் மதுவையுண்டிடுந்
தண்டமிழிருந்திடிற் சங்கஞ்சேர்ந்திடுங்
குண்டுணியிருந்திடிற் கோள்கள்மிஞ்சிடும்
பெண்டுகளிருந்திடிற்பெரியசண்டையே. (கக)

தன்னைப்புகழ்வானுஞ் சாட்சிசொல்லிநிற்பானும்
பொன்னைமிகத்தேடிப்புதைப்பானும்-ஒன்னலர்தம்
நண்புத்திகேட்பானு நாணமில்லாதானும்
பெண்புத்திகேட்பானும் பேய். (உ0)

மங்கைகைகைசொற்கேட்டுமென்னர்புகழ்த்தசரதனு மா
ணமானான், செங்கமலச்சீதைசொல்லை சீராமன்கேட்டவுட
ன் சென்றான்மான்பின், தங்கையள்தன்சொற்கேட்ட விராவ
ணனுங்கிளையோடுதானுமாண்டான், நங்கையர்சொற்கேட்ப
தெல்லாங் கேடுவரும்பேருலகோர் நகைப்பர்தாமே. (௬௧)

அன்னைதயையு மடியாள்பணியுமலர்ப
பொன்னினழகும்புவிபொறையும்-வன்னமுலை
வேசிதுயிலும் விறன்மந்திரிமதியும்
பேசிலிவையுடையாள்பெண். (௬௨)

அல்லலேபெண்ணைப் பிறத்தலாங்கதி
னல்லலேயிளமையிற் பிறத்தலாங்கதி
னல்லலேகட்டழ குடைமையாங்கதி
னல்லலேயிரவலர் சார்பிருத்தல். (௬௩)

அடுகரிதொடரவீழ ஐவந்தலைநாகங்காண
விடிகிணற்றறுகின்வேரைப் பற்றிநான்றிடவவ்வேரைக்
கடுகவோரெலியும்வந்து கறித்திடவதினின்றேனுக்
கிடை துளிதேனக்கின்பம் போலுமிப்பிறவியின்பம். (௬௪)

கொண்டுவிண்படர் கருடன் வாய்க்கொடுவரிநாகம்
விண்டநாகத்தின்வாயினில் வெருண்டவன்றேரை
யுண்டுதேரையின்வாய்தனி லகப்படுதும்பி
வண்டுதேனுகரின்பமே யானிடரின்பம். (௬௫)

ஆலிலைபூவுங்காயு மளிதருபழமுமுண்டேல்
சாலவேபட்சியெல்லாந் தன்குடியென்றேவாழும்

வாலிபர்வந்துதேடி வந்திப்பார்கோடிகோடி
ஆலிலையாதிபோனு லங்குவந்திருப்பாருண்டோ. (௪௬)

ஏரிநீர்நிறைந்தபோதங் கிருந்தனபட்சியெல்லாம்
மாரிநீர்மறுத்தபோதப் பறவையங்கிருப்பதுண்டோ
பாரினையாளும்வேந்தன் பட்சமுமறந்தபோது
ஆருமேநிலைநில்லாம லவரவரேகுவாரே. (௪௭)

கற்பகத்தருவைச்சார்ந்த காகமுமமிர்தமுண்ணும்
விற்பனவிவேகமுள்ள வேந்தரைச்சேர்ந்தோர்வாழ்வர்
இப்புவிதன்னிலெனறு மிலவுகாத்திடுங்கிளிப்போல்
அற்பரைச்சேர்ந்தோர்வாழ்வ தரிதரிதாகுமம்மா. (௪அ)

நிலைதளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை
சலமிருந்தகன்றபோது தாமரைக்கருக்கன்கூற்றம்
பலவனமெரியும்போது பற்றுதீக்குறவாங்காற்று
மெலிவதுவிளக்கேயாகின் மீண்டுமக்காற்றேகூற்றும். (௪௯)

மனைக்குவிளக்க மடவாள்மடவாள்
தனக்குத்தகைசாலபுதலவர்-மனக்கினிய
காதற்புதலவர்க்குக்கலவியேகல்விக்கங்
கோதிற்புகழ்சா லுணர்வு. (௫0)

துற்சனனறனக்குத்தானுந் துரைத்தனங்கொடுத்தாலெ ன்றும், சற்பனைதுரோகம்கேடு தானினைத்திடுவானென்போல், மற்கடந்தானுமாகி வாலிலேதேளுங்கொட்டி, உற்றிடங் கொள்ளியீந்தா லூரெலாஞ்சுடும்போலன்றே. (௫௧)

சங்குவெண்டாமரைக்குத் தந்தைதாயிரவிதண்ணீர்
அங்கதைக்கொய்துவிட்டா லழுகச்செய்தந்நீர்கொல்லுந்
துங்கவண்கரையிற்போட்டாற் சூரியன்காய்ந்துகொல்வான்
தங்களினிலைமைகெட்டா லிப்படித்தயங்குவாரே. (௫௨)

ஆயத்துறையிற்பிறந்துவந் தந்தணர்பால்குடித்து
மாயக்கண்வேசையிடத்தேவளர்ந்து வண்ணானொருநாள்
ஏயப்புலவரிடத்தெட்டுநாள் செட்டியேனென்றபின்
போயக்கசாலைபுகுந்தனள்கா ணந்தப்பொய்மகளே. (௫௩)

பூசாரிபொய்யும் புலவோருரைத்தபொய்யும்
காசாசைவேசையர்கள் கற்றபொய்யும்-கூசாமல்
தட்டாருரைத்தபொய்யுஞ் சவுளிக்கடைப்பொய்க்குக்
கட்டாதுகால்வரிசை காண். (௫௪)

மாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சால வணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசாரங்கல்வி நயந்தவர்க்குக்
கோதற்றவாசகப்பொய்க்குப்பொய் கோளுக்குக்கோளறிவி
லாதவர்க்கிரட்டிப்பறிவுடையோர்செய்யு மாண்மைகளே. ()

அட்டமியிலோதிஞ லாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னான்கு நீதாகும்-கெட்டவுவா
வித்தைக்குநாசமாம் வெய்யபிரதமையிற்
பித்தரும்பேசார் பிழை. (௫௬)

பிறப்பித்தோன்வித்தைதனைப் பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசம் செய்தோ-னறப்பெரிய

பஞ்சத்திலன்னம் பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களென வெண். (௫௭)

எழுதரிதுமுன்ன மெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பரிது பண்டா-முழுதுமதைக்
கற்பரிதுகற்பயனைக் காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானன் னிலை. (௫௮)

முனியதட்டுமுட்டுக்கு முன்னீரளக்கும்
கனியுதிர்க்குங்கவ்வு நாய்க்காக்கும்-தனிவழிக்குப்
பத்திரமதாக்கும் பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற் றண்டிருந்தக்கால். (௫௯)

பகலோன்றெறுகிரணம் பாய்பறவையெச்சம்
மிகமேலுறுதகற்றும் விண்ணின்-முகிலதனுல
பெய்யுமழையைத்தடுக்கும் பேரழகுமாமொருவன்
கையிற்குடையிருந்தக்கால். (௬0)

கல்லுமுருத்தாது காலின்முட்டையாது
எல்லமார்த்தாண்டன்கூ டேறுது-தொல்லைவரு
மாலையிருளில் வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக் கால். (௬௧)

ஒருநான்குமீரரையுமோன்றேகேளா யுண்மையாயைய ரையுமரையுங்கேட்டேன், இருநான்குமூன்றுமொரு வொன் றுஞ்சொல்லா யிம்மொழியைகேட்டபடியீந்தாயாயின், ஒ ருநான்குமறுநான்கும் பெறுவாய்பெண்ணே பின்னையோர்

மொழிபுகலவேண்டாமின்றே, சரிநான்குபத்துமொருபதினை
ந்தாலே சகிக்கமுடியாதினியென்சகியேமானே. (௬௨)

தார்க்கொன்றைத்தாவென்றேன் ருவேழிலொன்றென்றன்
ஊர்க்கஞ்சிநான்மூன்றி லொன்றென்றே-னூர்க்கும்
பொதுவென்றான்பூவென்றேன் போயினன்றோழி
இதுவோநம்மீச னியல்பு. (௬௩)

தேனுகர்வண்டுமதுநனையுண்டு தியங்கியேகிடந்ததைக் கண்டு, நானதைச்சம்புவின்கனியென்று நடக்கையாலெடுத்துமுன்பார்த்தாள், வானுறுமதியம்வந்ததென்றெண்ணி மலர்க்கரங்குவிபுமென்றஞ்சிப், போனதுவண்டோபறந்ததோபழுந்தான் புதுமையோவிதுவெனப்புகன்றாள். (௬௪)

கருதியநூல்கல்லாநான்மூடனாகும் கணக்கறிந்துபேசாதான்கசடனாகும், ஒருதொழிலுமில்லாதான் * முகடியாகுமொனறுக்குமுதவாதான்சோம்பனாகும், பெரியோர்கண்முன்னினறுமரத்தைப்போலும் பேசாமலிருப்பவனேபேயனாகும், பரிவுசொலித்தழுவின்வன்பசப்பனாகும பசிப்பவருக்கிட்டுண்ணான்பாவியாமே. (௬௫)

தாங்கொணுவறுமைவந்தாற் சபைதனிற்செல்லநாணும்
வேங்கைபோல்வீரங்குன்றும் விருந்தினர்க்காணினாணும்
பூங்கொடிமனையாட்கஞ்சும் புல்லருக்கிணக்கஞ்செய்யும்
ஓங்கியவறிவுகுன்று முலகெலாம்பழிக்குந்தானே. (௬௬)

தரித்திரமிக்கவணப்பினையொடுக்கிச் சரீரத்தையுலர்தரவாட்டிக், தரித்திரமளவாச்சோம்பலையெழுப்புஞ் சாற்றருமு

* முகடி-மூதேவி.

லோபத்தைமிகுக்கும், தரித்திரந்தலைவன் றலைவியர்க்கிடை யே தடுப்பருங்கலாம்பலவிளைக்கும், தரித்திரமவமானம் பொய்பேராசை தருமிதிற்கொடியதொன்றிலையே. (௬எ)

தரித்திரங்களிபபாங்கடலுக்கோர்வடவைசாற்றுமெணணங்கள்வாழிடமாம், தரித்திரம்பற்பருக்கமுந்தோன்றத்தக்கபேராகரமென்ப, தரித்திரகனமை சாலொழுங்கென்னுந்தழைவனந்தனக்கழறனலாந், தரித்திரங்கொடியவெவற்றினுங்கொடிதத் தகையதைமொழித்தனனருமே (௬அ)

கோதறுகல்விசாலூர்க் குடியிருந்தறியானேனு
மோதருஞ்செல்வமிக்கோ னொருவனேசிறந்தோனுவன
காதலின்வேதமுன்னுங் கலைகள்கற் றுணர்ந்தானேனுந்
தீதமைமிடியனுயிற் சிறந்திடான்வேந்தவைக்கே. (௬௯)

பொருணனியுளனெனறியாரும் புகலுமோர் வார்த்தை வேண்டும், மிருகையுஙகடகமவேண்டுமிலஙகுகுணடலஙகள் வேண்டும், வருவிரலாழிவேண்டு மார்பிடைமதாணிவேணடு, முருவமுத்தாரம்வேண்டு முயர்ந்தபட்டாடைவேண்டும் ()

சிவிகைமுனனூர்திவேண்டுஞ் செழும்பொருட்செலவு வேண்டும், குவிகையேவலரும்வேண்டுங கோலமார்ந்திருக்க வேண்டுங், கவிகைதாங்குநரும்வேண்டுங்கையுறைசிறபபவேண்டு,மவிகையில்விளக்கம்வேண்டு மரசவைகுறுகுவார்க்கே.()

அரும்புகோணிடி லதுமணங்குன்றுமோ
கரும்புகோணிடிற்கட்டியும்பாகுமாம்

கொள்ளைக்காங்கள்ளுக்காங் கோவுக்காஞ்சாவுக்காங
கள்ளர்க்காந்தீக்காகுங் காண். (எஎ)

கொண்டான்குறிப்பறிவாள் பெண்டாட்டிகொண்டன
செய்வகைசெய்வான்தவசி-கொடிநொரீஇ
நல்லவைசெய்வானரச னிம்மூவர்
பெய்யெனப்பெய்யுமழை. (எஅ)

வேதமோதிய வேதியர்க்கோர்மழை
நீதிமன்னர் நெறியினுக்கோர்மழை
மாதர்கற்புடை மங்கையர்க்கோர்மழை
மாதமூன்று மழையெனப்பெய்யுமே. (எகூ)

அரிவிற்றிடு மந்தணர்க்கோர்மழை
வரிசைதப்பிய மன்னருக்கோர்மழை
புருடனைக்கொன்ற பூவையர்க்கோர்மழை
வருடமூன்று மழையெனப்பெய்யுமே. (அ0)

திருப்பதிமிதியாப்பாதஞ் சிவனடிவணங்காச்சென்னி
இரப்பவர்க்கீயாக்கைக ளினியசொற்கேளாக்காது
புரப்பவர்தங்கள்கண்ணீர் பொழிதரச்சாகாத்தேகம்
இருப்பினும்பயனென்சாட்டி லெரிப்பினுமில்லைதானே. (அக)

தன்னுடலினுக்கொன்றீந்தால் தக்கதோர்பலம்தாகு
மின்னியல்வேசிக்கீந்தால் மெய்யினில்வியாதியாகும்
மன்னியவுறவர்க்கீந்தால் வருவதுமயக்கமாகும்
அன்னியபரத்துக்கீந்தா லாருயிர்க்குதவியாமே. (அஉ)

கைப்பொருள்பெற்றஞான்றே கடவுளாலயத்திற்கிருந்து
மெய்ப்படுபுராண நூல்கள் விருப்பொடுகேட்டுவந்து
வைப்பெனவிரப்போர்க்கீந்து வருபவருளரேற்கூற்ற
மொய்ப்புயத்தண்டந்தப்பி முன்னவனின்பத்தாழ்வார். (அங)

பந்தவுடல்வீண்பாடு பட்டவுடல்சீசீ துற்
கந்தவுடலொன்றுக் காகாதவுட-லிந்தவுடல
வைத்துப்பார்த்தென்ன வலியவுயிர்மாய்த்துச்
செத்துப்போனாலு நல்ல தே. (அச)

காமாதியாலுங் கடுவெம்பசியாலுஞ்
சாமாறுந்துன்பமதைச் சாற்றகிலேன்-கோமானே
யெண்சாணுடம்பாலே பட்ட துயரென்சொல்கேன்
புண்பாலில்வேனுழைந்தாற் போல். (அரு)

பசிமிகுந்தபின்னெல்லை விதைப்பதுபோல்வீட்டிடைத் தீப்பற்றிக்கொண்டு, நசியும்போதகதையவிக்கவாறு வெட்டல் போலும்போர்நடக்குங்காலை, விசிக நூல்கற்கமுயல்வதுபோலுங் கபமிஞ்சிவிக்கிச்சிக்கி, இசிவுகொண்டுசாங்காலத் தெப்படிநீ யறம்புரிவாயிதயப்பேயே. (அசா)

இன்றருணோ தயங்கண்டோ முயர்கனக முகட்டின்மிசை யிந்தப்பானு, சென்றடையநாங்காண்ப தையமதைக்காண்கினுமேற் றிசையிருக்கும், குன்றடையுமளவுநா முயிர்வாழ்வதரிதன்முன் குறுகுங்கூற்றம், என்றச்சத் துடன்மனமே மறவாம லறவழியி லேகுவாயே. (அஎ)

கற்புடைமாதர்கொங்கை கவரிமான்மயிரின்கற்றை
வெற்புறுவேங்கையின்றோல் வீரன்கைவெய்யகூர்வேல்
அற்பர்தம்பொருள்கடாமு மவரவரிறந்தபின்னே
பற்பலர்கொள்வரிந்தப் பாரினிலுண்மைதானே. (௮௮)

வீணர்பூண்டாலுந்தங்கம்வெறும்பொய்யர்மேற்பூச்சென்பார்
பூணுவார்தராப்பூண்டாலும் பொருந்தியதங்கமென்பார்
காணவேபனைகீழாப்பாற் குடிக்கினுங்கள்ளேயென்பார்
மாணுலகத்தோர்புல்லர் வழங்குரைமெய்யென்பாரே. (௮௯)

ஒரிமையமீனுவங் தூணிழந்தையோ
நாரியேநணைபிழை நாட்டிவில்லையோ
பாரியாகணவனைப் பழுதுசெய்தநீ
நீரிலேயிருப்பது நிலைமையல்லவே. (௯௰)

சம்புவேயென்னபுத்தி சலந்தனின்மீனைநம்பி
வம்புறுவடத்தைநம்பாட்டு வானத்தைப்பார்ப்பதேனோ
அம்புவியாதேதம்நளா யாசகோபலவிட்டு
வம்பனைக்கைப்பிடித்த வாறுபோலாயிற்றன்றே. (௯௧)

கானலைநீரென்றெண்ணிக் கடுவெளிதிரியுமானபோல
மானுடமிலசுகாந்த மதியிலாக்கினிளைமெய்போல்
தேனினைக்கண்டுதும்பி திபயகிபநகைமைமயம்போல்
நானுனையபயமென்றெண்ணி நாளையும்போக்கினேனே. (௯௨)

பொன்னின்மணிகிங்கிணி பெலமொலிபுலம்ப
மின்னுமணிமேகலைகள் மெலமெலனவொலிப்பப்

வர்விருப்புறு வண்ணம், பரவிநின்றவர்க்கு மகட்கொடையுந வல பருணிதர்கடமையதாயால். (கூஅ)

பெண்ணுதவுங்காலை பிதாவிரும்பும்வித்தையையே
யெண்ணிறனம்விரும்பு மீன்றதாய்-நண்ணுடையிற்
கூறியநறசுற்றங் குலம்விரும்புங்காந்தனது
பேரழகுதானவிரும்பும் பெண். (கூகூ)

நானமென்பது மணங்கமழ்பொருளது நாவிலுண்பது வோசொல், ஊனுணங்குவேன் மடந்தையரணிவது வுயர்மு லைத்தடங் கோட்டில, ஆனதங்கது பூசிலைவீங்குவ தமையு மோவெனக்கேட்பக், கானவேட்டுவச் சேரிவிட்டகன்றனர் கடிகமழ்விலைவாணர். (க00)

கற்பூரப்பாத்திகட்டிக் கஸ்தூரியெருப்போட்டுக் கம் பூநீர்பாய்ச்சிப, பொற்பூரவுள்ளியினை விதைத்தாலுமதின்கு ணத்தைப பொருந்தக்காட்டுஞ், சொற்பேதையர்க்கறிவிங்கி னிதாக வருமெனவே சொலலினாலு, நற்போதம்வாராதாங் கவர்குணமே மேலாக நடக்குந்தானே. (க0க)

தண்டுலாவிய தாமரைப்பொய்கையில்
மொண்டுநீரை முகத்தருகேந்தினாள்
கெண்டைகெண்டையென நக்கரையேறினாள்
கெண்டைகாண்கில ணின்றுதயங்கினாள். (க0௨)

நறவுசந்தனக்குழம்பொடு நறுஞ்சுவைநலம்பெறவணிந்தாலு சருவசந்தேக மனமுடையாதரைத் தழுவலுமாகாதே (ஞ்

பருவதங்கள்போற் பலபலநவமணிப்பைம்பொனையீந்தாலும்
கெருவமிஞ்சிய மானிடர்தோழமை கிட்டலுயாகாதே. ௧0௩

நிலத்தினிற்சுனையின்மூழ்கி நின்றவடன்னைநேரே
குலத்தலைமஞ்ஞைகண்டு கூவெனக்காவிலேக
முலைத்தலையகனைக்கண்டு மும்மதக்கரிவந்துற்ற
தலைத்தலைசிங்கமென்றக் களிறுகண்டேகிற்றம்மா. (௧0௪)

கரியொருதிங்களாறு கானவன்மூன்றுநாளும்
இருதலைப்புற்றினாக மின்றுமிரையிதென்று
விரிதலைவேடன்கையில் விற்குதைதராம்பைக்கவ்வி
நரியனர்பட்டபாடு நாளைநாம்படவேபோமே. (௧0௫)

பூதலத்தின்மானிடராய்ப் பிறப்பதரிதெனப்புகலவர்பிற
ந்தோர்தாமும், ஆதிமறைநூலின்முறை யருள்கீர்த்திபெலா
ந்தங்க வன்பாய்ச்செயது, நீதிவழுவாதவகை வழக்குரைந்து
நலலோரை நேயங்கொண்டு, காதவழிபேரில்லான் கழுதை
யெனப்பாரினுள்ளோர் கருதுவாரே. (௧0௬)

மக்களாக்கையிற் பிறத்தலேயரிது மற்றதிலுந்
துக்கமூன்குரு டுமையைத் துறத்தலுமரிது
நற்குலத்திடை வருதலும்ரிது ஞானத்தான்
முக்கணீசனுக் காட்படல் முற்றிலுமரிதே. (௧0௭)

ஆரம்பூண்டமணிமார்பா வயோத்திக்கரசேயன்னைகேள்
ராமிருக்கமாமிருக் விலைகளுதிர்ந்தவாறேது
வாரங்கொண்டுவழக்குரைத்து மண்மேனின்றுவலிபேசி
ஓரஞ்சொன்னகுடியதுபோ லுதிர்ந்துகிடக்குந்தம்பியமே. ()

வல்லியந்தனைக்கண்டஞ்சி மரந்தனிலேறும்வேடன்
கொல்லியபசியைத்தீர்த்தே யிரட்சித்தகுரங்கைக்கொன்று
நல்லவன்றனக்குச்செய்த நலமதுமிக்கதாகும் (ன்
புல்லர்கட்குச்செய்தா லுயிர்தனைப்போக்குவாரே.(௧0௯)

தன்மானங்குலமானந் தன்னைவந்தடைந்தவுயிர் தங்கண்மானம், எனமானமாகிலென்ன வெல்லவருஞ்சரியெனவே யெண்ணம்போந்து நன்மானம்வைத்தெந்த நாளுமவர்தங்களுக்கு நன்மைசெய்வோர், மன்மானியடைந்தோரைக் காக்கின்றவள்ளலென வழுத்தலாமே. (௧௧0)

தன்னைத்தான்புகழ்வோருந் தன்குலமேபெரிதெனவே தான்சொல்வோரும், பொன்னைத்தான்றேடியருள் புரியாமற் புதைத்துவைத்துப் பொன்றினோரும், மின்னைப்போல்மனையாளை வீட்டில்வைத்து வெளிசுகம்விரும்புவோரும், அன்னைபிதாபாவலரைப் பகைப்போருமறிவிலாக் கசடராமே. (௧௧௧)

பெண்டுகள்சொற் கேட்கின்ற பேயர்களேகுணமூடப் பேடிகளாவர், முனைகளுக்கிணையில்லா முனைவீரர்புருஷரென மொழிவோருந்தே, உண்டுலகமுறிப்பாருள் கீர்த்தியுறமின்னதென வுரைார்வேயிலலார், அண்டினவர்தமைக்கெடுப்பா ரழிவுபுகழ்கேசொலவதவை ரறிவுதானே. (௧௧௨)

பொல்லார்க்குங் கல்வியில் கேர்வுண்டா மதனேடு பொருளுஞ்சேர்ந்தாக்கால், சொல்லாதுஞ்சொல்லவைக்குஞ்சொற்சென்றுற குடிகெடுக்கத் துணிவர்கண்டாய், நல்லோர்க்கிம்

மூன்றுகுண முண்டாகிலருளதிக ஞானமுண்டாம், எல்லோ
ர்க்கு முபகார ராயிருக்குபாகதியை யெய்துவாரே. (கக௩)

உந்தியின்சுழியின்கீழ்ச்சே ருரோமமாங்கரியநாகஞ்
சந்திரனெனவேயெண்ணிக் கையலாள்முகத்தைநோக்க
மந்தரகிரிகள்விம்மி வழிமறித்திடுதலக்கண்டு
பிந்தாக்கயற்கணோடிச் செவிதனக்குரைத்ததம்மா. (ககச)

மாகமாமேடைமீதில் மங்கைகநின்றுலாவக்கண்டு
ராகமாமதியென்றெண்ணி யிராகுவந்துற்றபோது
பாகுசேர்மொழியினாளும் பதறியோடாதம்வாங்கத்
தோகைமாமயிலெனறெண்ணித் தொடர்ந்தராமீண்டதனமே

பலநாளைவிழுநீருஞ் சாகரந்தன்னைச்சார்ந்சாற்
குலமெனறேகொள்வதலலாற்குளமட்டலெனறுத்ததுண்டோ
புலவர்கள்சபையிற்கூறும் புன்கவிதனனைச்சொல்ல
நலமெனறேகொள்வாலலா னிகலவேரானெரியோர்குற்றம்.

காரொனுங்குழல்கடப்பிக் கடுந்தோலவாளிதப்பித்
மேரொனவளர்ந்துநின்ற வேழுநதிம்பொடுதப்பி
தாருறுகாயரோபச் சங்கிலிவழிபோசென்று
பிரியமினனவளர்ந்த செல்வனல்குலிற்கைவைத்தான். ()

கண்டதையொழிக்கு மவாக மேலாகமொழிக்குமேலே
வண்டலுமூழ்க்குநீசரு முதியுமாருவா சல
உண்டதனிருப்பைக்கண்டு பெருங்களியுள்ளங்கொண்டு
கண்டனரீனாருரெல்லாங் கதியெனக்கருதுவாரே. (கக௪)

கரந்தொருவன் கணைதொடுக்க மேற்பறக்கும்ராஜாளிக ருத்துங்கண்டே, உரந்துசிறுகானகத்திலுயிர்ப்புருப்பேடுதன க் குரைக்குங்காலை, விரைந்துவிஷந்தீண்டவுயிர் விடும்வேட ன்கணையால்வல் லூறும்வீழ்ந்த, தான்செயலே யாவதல்லாற் றன்செயலாலாவதுண்டோ வறிவுள்ளோரே. (௧௧௯)

கம்பமதக்கடகளிற்றன் றில்லைவாழுங் கணபதியின்பெ ருவயிற்றைக் கண்டுவாடி, யும்பரெலாம்விழித்திருந்தா ரயி ல்வேறசெங்கை யுடையவறுமுகவனுங்கண் ணீராறானான்,ப ம்புசுடர்க்கண்ணனுமோ நஞ்சுண்டான்மால பயமடைந்தா னுமையுமுடற்பாதியானாள், அம்புவிமைப்படைத்திடுவ தவ மேதயென்றயனு மனமிறங்காம லலைகின்றானே. (௧௨0)

ஆசையாற்சந்திர னங்கந்தேய்ந்தனன்
ஆசையாற்சௌபரி யறிவைநீங்கினான்
ஆசையானராசுர னாவிபோக்கினன
ஆசையால்வாலியு மழிந்துபோயினான். (௧௨௧)

ஆசையெனும்பாசத்தா லாடவர்நஞ்சிங்கைதனை
வீசமனையாந்தரியில வீழ்த்தியே-பாசபுரி
பாயாமனைவியரா மக்கணமகவென்னு
நாயாற்கடிப்பித்த நாடு. (௧௨௨)

காமமேகுலத்தினையு நலத்தினையுங்கெடுக்கவந்த களங் கமாகுங், காமமேதரித்திரங்க ளனைத்தினையும்புகட்டிவைக்கு ங் கடாரமாகுங், காமமேபரகதிக்குச் செல்லாமல்வழியடை

க்குங் கபாடமாகுங், காமமேயனைவரையும் பகையாக்கிக்கழுத்தரியுங் கத்திதானே. (கஉ௩)

வாலிமடிந்ததுவும் வல்லரக்கர்பட்டதுவும்
கோலமுடிமன்னர் குறைந்ததுவும்-சால
மதியுடையநூற்றொருவர் யாண்டதுவுமையோ
சதவிகாத்தாலவந்த தாழ்வு. (கஉ௪)

காமத்தாலிந்திரன் கலக்கமெய்தினன்
காமத்தாலிராவணன் கருத்தழிந்தனன்
காமத்தாற்கீசகன் கவலையுற்றனன்
காமத்தாலிறந்தவர் கணக்கிலார்களே. (கஉ௫)

திமையுள்ளனயாவையுந் தந்திடுஞ்சிறப்பும்
தோமில்செல்வமுங்கெடுக்கு நல்லுணர்வினைத்தொலைக்கும்
ஏமநன்னெறிதடுத்திருளுய்த்திடுமிதனால்
காமமன்றியேயொரு பகையுண்டுகொல்கருதில. (கஉ௬)

அஞ்சனவைவேற்கணிமையர்தம்பேராசை
நெஞ்சுபுகின்றொருவர் நீங்குநிலைமைத்தோ
எஞ்சலபுரியாதுயிரையெக்காலுமீர்ந்திடுமால
நஞ்சமினிதம்மவோர் நாளுநகவியாதே. (கஉ௭)

அம்புமழலுமவிர்கதிர்ஞாயிறும்
வெம்பிச்சுடினும்புறஞ்சுடும்-வெம்பிக்
கவற்றிமனத்தைச் சுடுதலாற்காமம்
அவற்றினுமஞ்சப்படும். (கஉ௮)

ஊருளெழுந்த வுருசெழுசெந்தீக்கு
நீருட்குளித்து முயலாகும்-நீருட்
குளிப்பினுங்காமஞ் சுடுமேகுன்றேறி
யொளிப்பினுங்காமஞ்சுடும். (கஉக)

பைந்தொடியாராசைநோய் கம்பீரமனிதரையும் பதும
ந்தன்னை,முந்திரவிக்கதிர்போலமிளிரவிக்குங்கணவிழியு முனை
க்கூர்வாளும், வெந்நவிருப்புப்பொறியு மெனக்கொடிய மன
வேட்டை மேருவொத்த, சுத்தஞானியர் திரர் சூரரையெல
லாமிமைப்பிற் அரும்புசெய்யும். (கஙO)

வெகுளியேயுயிர்க்கெலாம வினைக்குந்தீவினை
வெகுளியேகுணத்தவம் விரதபாய்க்குமால்
வெகுளியேயறிவினைச் சிதைக்குஞ்வெண்மைசால
வெகுளியிற்கொடும்பகை வேறுஞ்ன்றிலலையால. (கஙக)

மூங்கிலிற்பிறந்த முழங்கு நீழங்கின் முதலாமுழுங்கு
மாபோலத், தாஙகருந்தினந்நீ தனனுமேபிறந்து தன்னுயு
கிளையெலாஞ்சாய்க்கும், ஆஙகநனவொப்மை யறிந்தவர்கமை
யா லதனையுள்ளடங்கவுடங்கா, நோக்கியகோபத் தியினை
யொக்கு முட்பகையுலகிலமேவ நுண்டோ. (கஙஉ)

கோபத்தாற்செளசிகன் றவத்தைக்கோட்டினன்
கோபத்தாலருடனும் கோலமாற்றினான்
கோபத்தாலிந்திரன குலிசம்போக்கினன்
கோபத்தாலிறந்தவர் கோடிகோடியே. (கஙங)

விருந்தினனாக வொருவன்வந்தெதிரின் வியத்தல்நன்மொழி யினிதுரைத்த, றிருந்துறநோக்கல் வருகெனவுரைத்தலெழுதல்முன் மகிழ்வனசெப்பல், பொருந்துமற்றவன்றனருகுறவிருத்தல் போமெனிற்பின்செல்வதாதல், பரிந்துநன்முகமன் வழங்கலிவ்வொன்பா னொழுக்கமும் வழிபடும்பண்பே. (கஙச)

இணையிறனதிலலிடத்தே கிழக்கிசையிற்றலைவைக்க வினியபாமன், மணிதிகழ்பொன் னெடுமாடத் தலைநெடிற்றென்றிசையதனில் வைக்கவேண்டும, மணிபெறுவேற்றாருனையிற் குடதிசையின் மீதுவைப்பாதுவேயன்றி, புணர்விலாதுதரத்தே தலைவைத்துத்துயில்புரிதலொண்ணுதாமால். ()

கதிர்பெறுசெங்நெல்வாடக் கார்குலங்கண்டுசென்று
கொதிதிரைக்கடலிற்பெய்யும் கொள்கைபோற்குவலயத்தே
மதிதனம்படைத்தபேர்கள் வாடினோர்முகத்தைப்பாரார்
நிதிமிகப்படைத்தோர்க்கீவார் நிலையிலார்க்கீயமாட்டார். ()

அன்பிலாநெஞ்ச மருப்பிணியெனவு மளவிலாப்பகைநெனவும், துன்பயார்சோக போகமேமுதலாந் துயரொலாவிளைநிலமெனவும், இன்பவீடெய்தா திடற்கிடையூறு மிருளுமெனறியப்புவர் பெரியோர், அன்பிலாவிறைவர்க் கன்பிலாநெஞ்சே துணையிலதுணை யிலையெனக்கே. (கஙஎ)

கெட்டசாறுகளிதொருநஞ்சி கிருமியுண்டாவதைக் கிளைவேர்செலிந்தபோர்முறிந்தபாதுகின்றியா, இட்டசோறுகொழியலுப் பிடாதபுர்கையாயினும்-எங்குமன்பதாகநுங்க வின்

பமாயிருக்குமே, பட்டபாகுபசுவின்நெய்ப் பருப்புமுக்கனிக் குழாம்-பாளிதங்கடாளிதங்கள் பண்ணியாரவகையுடன, அட்டபாற்குழம்புகன்ன லமுதமோடமுதவினும்-அன்பிலேனோ டளித்திடாத வசனமென்னவசனமே. (கங அ)

மானிடனொருவன்றனக்கருஞ்செல்வம் வாய்க்கவென்றனுதினமுயற்சி, தானுஞற்றுவனேற்கடவுளுமதனைத் தந்தளிக்குவனதாலன்றே, ஆனபேரறிஞர் திருவினைமுயற்சியாக்குமம்முயற்சியலலாமே, ஈனமாரினமை புகுத்திடுமாலென்றியாருநன்குணர்தரகவில்லார். (கங கூ)

கடவுளீகுவனென்றெண்ணி நித்தியமுங்கருதுமுயற்சிசெய்யானேல, அடலுறுசெல்வ மடைகுவனேகொலருங்கலத்திட்டபாலடிசில், மிடலுறுகரத்தா லெடுத்துணுதெங்ஙன் வீங்கும்வெம்பசிப் பிணியொழிப்பன், உடல்பவந்தனக்கோராகரமாகு முடனனிவாட்டு மெய்த்தவத்தோய். (கசo)

ஒப்புடன்முகமலர்ந்தே யுபசரித்துண்மைபேசி
உப்பிலாக்கூழிட்டாலு முண்பதேயமிர்தமாகும்
முப்பழமொடுபாலன்ன முகங்கடுத்திடுவாராகில்
கப்பியபசியின்போக்கிற் கடும்பசிநல்லதாமே. (கசக)

மங்கையர்கள்யோனிமிசை வைத்திருக்குமாசையினை
பங்குசெய்துநூறதிலொரு பங்கெடுத்[illegible]க்-கங்கைமதி
வேணியரன்பாதார விந்தத்தில்வைத்தக்கால
காணலாங்காணுக்கதி. (கசஉ)

மூத்திரத்தினனையப் பட்டமுடையோனிக்காய்க்
காத்திரத்தைவிட்டார் கணக்கில்லை-சாத்திரத்தால்
வானைக்காறீநீரை மண்ணைப்பிரித்துசிவ
ஞானக்காலாசை யறும். (கசங)

தண்டாமரையினுடன்பிறந்துந் தண்டேனுகராமண்டூகம்
வண்டேகானத்திடையிருந்து வந்தேகமலமதுவுண்ணும்
பண்டேபழகியிருந்தாலு மறியார்புல்லோர்நல்லோரைக்
கண்டேகளித்தங்குறவாடித் தம்மிற்கலப்பர்கற்றோரே. ()

வானரமழைதனி னனையத்தூக்கணன்
றானொருநெறிசொலத் தாண்டிப்பிய்த்திடும்
ஞானமுங்கல்வியு நவின்றநூல்களும்
ஈனருக்குரைத்திடி லிடரதாகுமே. (கசரு)

வண்டுமொய்த்தனையகூந்தல் மதனபண்டாரவல்லி
கெண்டையோடொத்தகண்ணாள் கிளிமொழிவாயினூறல்
கண்டுசர்க்கரையோதேனோ கனியொடுகலந்தபாகோ
அண்டர்யாமுனிவர்க்கெல்லா மமுதமென்றளிக்கலாமே. ()

செல்வத்தைப்பெற்றார் சினங்கடிந்துசெவ்வியராய்ப்
பலகிளையும்வாடாமற் பாத்துண்டு-நல்லன
தானமறவாத் தன்மையரேலஃதென்பர்
வானகத்துவைப்பதோர் வைப்பு. (கசஎ)

காணக்கணகூசுதே கையெடுக்கநாணுதே
மாணொக்கவாய்திறக்க மாட்டாதே-வீணுக்கென்

என்பெல்லாம்பற்றி யெரிகின்றதையையோ
அன்பிலலாளிட்ட வமுது (கசஅ)

வெம்புவாள் விழுவாள்பொய்யே பேலவிழுந் தழுவாள் பொய்யே, தப்பலந் தின்பாள்பொய்யே சாகின்றேனென்பாள்பொய்யே, அம்பிலுங்கொடியகண்ணா ளாயிரஞ்சிந்தையாளே, நம்பினபேர்களெல்லா நாயினுங்கடையாவாரே. (கசகூ)

கோளறிபடர்ந்தகாட்டிற் குறங்கிலவைத்தமுதமூட்டித்
தோளினிற்றூக்கிவைத்துச் சுபந்துபேறுவளர்த்த
ஆளனைக்கிணற்றிற்றள்ளி யழகிலாமுடவற்சேர்ந்தாள்
காளநேர்கண்ணிணாரைக் கனவிலுநம்பொணாதே. (கருo)

எறியென்றெதிர்நிற்பாள்கூற்றஞ்சிறுகாலை
அட்டிற்புகாநா ளருமபிணி-அட்டதனை
உண்டியுதவாதா ளில்வாழ்பேயிம்மூவர்
கொண்டானைக்கொலலும் படை. (கருக)

கெட்டாந்தான்மங்கையருக் கழகுகுன்றுங் கேள்வியில லாவரசனு லுலகமபாழாங், நற்புத்திமந்திரியா லரசுக்கீனந் சொற்கேளாப்பிள்ளைகளாற் குலந்துங்கீனம், கற்புத்திகற்பித் சாலற்பர்கேளார் நன்மைசெய்யத்தீமையுட னயந்துசொல வார், அற்பரோடிணங்கிவிடிற் பெருமைதாழுமரியதலங்கோ பத்தா லழிந்துபோம். (கருஉ)

இறைபவன்சேவகர்க் கெழுதவிலலவட்
கறைகழல்கணவன பாலுமகர்க்காரியமன

முறையலபாயர்க்கு மருகன்மூப்பினும்
மறைதருமுறையினால் வணங்கலவேண்டுமால். (௧௫௩)

மங்கையர்விருந்தினர் வழிநடந்தயர்ந்தபேர்
பங்குபிணியாளரொடு பாலகர்விருத்தர்
அங்கமறைவேதியரு மந்நகருமன்னர்
தங்கள்குறையாலவருமோர் தாழ்வுமறியாரே. (௧௫௪)

காலைமாலை யுறக்கமுங்காமமுங்
கோலமேனி குலைந்தபின் கூடலுந்
சாலிராத்தயிர் சாதமோடுண்டல
பாலோடாகினு மாதுபிரிவமே. (௧௫௫)

இஞ்சிநெல்லி யிலைக்கறியாகநாய்
மிஞ்சிவெண்டயிர் கவுகுலருந்திடல்
பிஞ்சுப்பூமகள் போயுடன்மூத்தவள்
கொஞ்சிக்கொஞ்சி குலாவிருப்பளே. (௧௫௬)

நூதனக்கலவிதன்னை நூலிடையில்லாளாகும்
யாதுசெய்தனையிலவஞ்சயப்பார் நகையமாகக்
காதலன்றெளியத்தானங் கனிந்தினைப்பிரக்குமபோதே
கோதறுமியக்குட்டி பாய்ந்திடக்கொட்டுறாளே. (௧௫௭)

முப்பமதக்களியோடு மூர்வல்லியமாமேமூ
செய்யவைபிற்றில்லாமேறைச்சுக பொன்றினைத்திண்ணவேவாடு
நம்மனத்துயசைமொண்டோ கலாவணைவாவெனருடு
விம்பமூற்மொழிமூறுகுங்கம் செகுணமுசெய்ணுடியுறாளே.

வேடமுநீறுஞ்சாத்தி வேதநூல்மிகவுங்கற்றே
யேடவிழ்குழலாள்பங்க னீசனுக்கடிமையாகு
போடவேவேண்டுமென்னம் பொறுக்கவேவேண்டுங்குற்றந்
தேடவேவேண்டுநன்மை செய்யவேவேண்டுந்தர்மம். ()

மலையென்னும்வினைதீர மறுவுற்றபுனல்மூழ்கி
அலைகின்றமுழுமூட ரறிவென்னவறிவென்ன
புலையன்றன்மலமுண்ணு மெனையுண்ணும்புலையர்க்குக்
குலமென்னநலமென்ன கூகூவென்றனகோழி. (கசுo)

தங்கள்மக்களுந்தாங்களும் படுதுயர்தமக்கோ
ரெங்கள்மக்களும்யாங்களு மென்செய்தோமினிமேல்
எங்கள்மக்களும்யாங்களு மின்றுறுதுயரை
தங்கள்மக்களுந்தாங்களும் படுவர்சத்தியமே. (கசுக)

நிறைபொருளுடையவர் நிந்தைசொல்லினு
முறையுறுவழக்கென மொழிந்துபோற்றுவர்
வறுமைமிக்குடையவர் வழங்கும்வாய்மொழி
அறமொழியாகினு மதனையெள்குவர். (கசுஉ)

இனத்துணையுணவயி றிலாதசிற்றெறும்
பினத்தொடுமலையென விருக்கும்யானையுங்
கனத்துருபசியினுற் கலங்குகின்றன
மனத்துயர்நீங்கினு ரில்லைமன்னனே. (கசுங)

தட்டானிடத்தினிற் றங்கப்பணிகள் சீமைப்பதுவும்
வட்டாடுவாரைத் திருத்திநன்மார்க்கத்தில் வைப்பதுவும்

பட்டாங்குகாகிதப் புத்தகமச்சிற் பதிப்பதுவும்
தொட்டார்மனத்தைப் பலவாறுநாளுந் துயர்செய்யுமே. ()

வெள்ளத்தேபோகாது வெந்தணலில்வேகாது
கொள்ளத்தான்போகாது கொடுத்தாலுங்குறையாது
கள்ளருக்குமெட்டாது காவலுக்குளமையாது
உள்ளத்தேபொருளிருக்க வூரிலுழைத்துழலவானேன். ()

மாதாநாஸ்தி பிதாநாஸ்தி
நாஸ்திபந்து சகோதரஃ
அர்த்தோநாஸ்தி க்ரகம்நாஸ்தி
தஸ்மாஜாக்ரத ஜாக்ரத. (௧௬௬)

ஆசையாபத் யதேலோகஃ
கர்ம்மஞபகு சிந்தயா
க்ஷீணமாயுர்ணஜாநாதி
தஸ்மாஜாக்ரத ஜாக்ரத. (௧௬௭)

காமஃக்ரோதச்சலோபச்ச
தேஹேதிஷ்டந்திதஸ்கராஃ
க்ஞானரத்நாபஹாராய
தஸ்மாஜாக்ரத ஜாக்ரத. (௧௬௮)

ஜன்மதுக்கம் ஜராதுக்கம்
ஜாயாதுக்கம் புனர்ப்புனஃ

சம்சார சாகரே துக்கம்
தஸ்மாஜாக்ரத ஜாக்ரத. (கசு௯)

சற்சங்கத்வேநிற்சங்கத்வம்
நிற்சங்கத்வேநின்மோஹத்வம்
நின்மோஹத்வேநிமலசித்தம்
நின்மலசித்தாஜீவன்முக்தா. (கஎ0)

பாலுக்குச்சற்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்குப்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்திக்தைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனகதண்டி
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விதனமொன்றே.

யானையைச்சலந்தனி லிழுத்தவக்கரா
பூனையைக்கரைதனிற் பிடிக்கபோகுமோ
தானையுந்தலைவருந் தலம்விட்டேகினால்
சேனையுஞ்செலவமுந் தியங்குவார்களே. (கஎஉ)

கொண்டநற்கலைகளோடுங் குணமிலாக்கோதைமாரைக்
கண்டுகண்டிருப்பதல்லாற் கனவிலும்புல்லவொண்ணு
துண்டனமதுவையுண்ண வோவியப்பூவிலவீழ்ந்த
வண்டினம்பட்டபாடு மனிதரும்படுவர்தாமே. (கஎங)

மயில்குயில்செங்காலன்னம் வண்டுகண்ணாடிபனறி
அயிலெயிற்றரவுதிங்க ளாதவனாழிகொக்கோ
டுயரும்விண்கமலம்பன்மூன றுமருணமுடையோர்தம்மை
இயலுறுபுவியோர்போற்று மீசனெனறெண்ணலாமே. ()

தெருளிலாக்கலையினர் செருக்குமாண்மையும்
பொருளிலாவறிஞர்தம் பொறியடக்கமும்
அருளிலாவறிஞர்த மௌனநாசமுங்
கருவிலாமங்கையர் கற்புமொக்குமால் (கஎ௫)

மங்குலைம்பதினாயிரம் யோசனைமயில்கண்டுநடமாடும்
தங்குபானுநூறாயிரம்யோசனை தாமரைமுகம்விள்ளும்
திங்களாதவற்கிரட்டியோசனையுறச் சிறந்திடுமரக்காம்பல்
எங்கணாயகனன்பரா யிருப்பவரிதயம்விட்டகலாரே. (கஎசு)

குரைகடல்வறுமையுங் குறத்தியுண்மையும்
நரையறமருந்துநின் றிளமைநண்ணலும்
விரைசெறிகுழலினள் வேசையாசையும்
உரைசுறவடைவது மஞ்சுமில்லையே. (கஎஎ)

மூடனைமூர்க்கன்கொன்றால் மூர்க்கனைமுனிதான்கொல்லு
மடவனைவலியான்கொன்றால் மறலிதானவனைக்கொல்லுந்
தடவரைமுலைமாதேயித் தரணியிலுள்ளோர்க்கெல்லா
மறவனையடித்தகோலும் வலுவனையடிக்குங்கண்டாய். ()

தாம்பினிற்புதைத்தகல்லுந் துகளன்றிச்சுடர்கொடாது
பாம்புக்குப்பால்தான்வார்த்துப் பழகினுநன்மைதாரா
வேம்புக்குத்தேன்வார்த்தாலும் வேப்பிலைக்கசப்புமாறா
தாம்பலநூல்கற்றாலுந் துர்சனர்நல்லோராகார். (கஎகூ)

தேளது தீயில்வீழ்ந் [illegible] செத்திடாதெடுத்தபேரை
மீளவேகொடுக்[illegible]யுறக்கொட்டலேபோல்

ஏளனம்பேசித் தீங்குற் றிருப்பதையெதிர்கண்டாலும்
கோளினர்தமக்குநன்மை செய்வதுகுற்றமாமே. (௧௮௦)

பொய்யருக்குப்பொய்யுரைத்தால் வெற்றியாமவருக்குப் பொய்யாகாத, மெய்யருக்குப்பொய்யுரைத்தால் தேய்பிறை போற்றவங்குறையுமிடியுண்டாகும், தூய்யதாய்தந்தையர்க்குப்பொய்யுரைத்தால்வறுமைபிணி தொலையாவென்றும், உய்ய வருடேசிகற்குப் பொய்யுரைத்தானரகமது வுண்மைதானே.

மெய்யதைச்சொல்வாராகில் விளங்கிடுமேலுநன்மை
வையகமதனைக்கொள்வார் மனிதரிற்றேவராவார்
பொய்யதைச்சொல்வாராகிற் போசனமற்பமாகும்
நொய்யவரிவர்களென்று நோக்கிடாரறிவுள்ளோரே. (௧௮௨)

தரித்திரமென்பிணி தான்வந்துற்றிடில்
கருத்தழிந்துண்*பதிக் காவிகலங்குவார்
பருத்துளவோவெனின் மாநிலத்திலே
பொருத்தவொண்செல்வமென் மருந்திற்போகுமே. (௧௮௩)

அண்டரண்டமிரண்டுமுண்ட வரங்கனேயவராதலால், அந்தலங்கையுமரக்கர்சேனையு மவன்வயிற்றினிலில்லையோ, தெண்டிரைக்கடல்கிரிமேருவுந் திருவயிற்றினிலில்லையோ, சீதையைச்சிறைவைத்ததாமென முனிவரெப்படிசெப்பினர், குன்றுகுன்றென நின்றமந்தியுங் குரங்குந்தன்னுடை சேனையும்,

* பதி-சோறு.

கூடியேபடையேகினுரென வவனுமெப்படிகூறினன், கண்ட
துண்டம தாக்குவேன்கவி சொன்னவன்றனைக் காணிலேன,
கம்பனுமிருவம்பனுவவன் காளைகூளைசுதனல்லவோ. ()

மண்ணூர்சட்டிக்கரத்தேந்தி மரநாய்கவ்வுங்காலினராய்
அண்ணுந்தோடியிரப்பாரை யறிந்தோமறிந்தோமம்மம்மா
பண்ணூர்மொழியார்பாலடிசில் பைம்பொற்கலந்திற்பரிந்தூட்
உண்ணுநின்றேயொருவருக்கு முதவாமாந்தரிவர்தாமே. (ட

பொலிவளந்தங்கிய புவியிற்றுணுண்டும்
பலிபிறர்க்கிட்டுமே பயன்றுவ்வான்பொருள்
வலியிலாபபேடிகை வாள்கொலாணென
அலியினைமேவிய வரம்பையேகோலோ. (கசுசு)

அறிவுளோர்தமக்குநா ளூ மரசருந்தொழுதுவாழ்வார்
நிறையொடுபுவியினுள்ளோர் நேசமாய்வணக்கஞ்செய்வார்
அறிவுளோர்தமக்கும்யாதோ ரசடதுவருமேயாகில
வெறியனென்றிகழாரெனறு மேதினியுள்ளோர்தாமே. (கசுஎ)

இடுக்கினுலவறுமையாகி யேற்றவர்க்கிசைந்தசெல்வங்
கொடுப்பதேமிகவுநன்று குற்றமேயின்றிவாழ்வார்
தடுத்ததைவிலக்கினோர்க்குத் தக்கநோய்பிணிகளாகி
உடுக்கவேயாடையின்றி யுண்சோறும்வெல்லமாமே. (கசுஅ)

நாரிகள்வழக்கதாயினுவெறிந்துரைத்தார்சுத்தர்
ஏரிபோற்பெருகிமண்மே லிருகண்ணும்விளங்கிவாழ்வார்

ஓரமேசொல்வாராகி லோங்கியகிளையுமாண்டு
தீரவேகண்ணிரண்டுந் தெரியாமற்போவர்தாமே. (௧அ௯)

துப்புறச்சிவந்தவாயாள் தூயபஞ்சணையின்மீதில்
ஒப்புறக்கணவனோடே யுயர்லீலைசெய்யும்போது
கற்பகஞ்சேர்ந்தமார்பிற் கனதனமிரண்டுந்தைத்தே
அப்புறமுருவிற்றென்றே யங்கையாற்றடவிப்பார்த்தாள். ()

நற்குணமுடையவேந்தை நயந்துசேவித்தலொன்று
பொற்புடைமகளிரோடு பொருந்தியேவாழ்தலொன்று
பற்பலரோடுநன்றூல் பகர்ந்துவாசித்தலொன்று
சொற்பெறுமிவைகண்மூன்று மிம்மையிற் சொர்க்கந்தானே.

நிட்டையிலே புரிந்துமனத் துறவடைந்த பெரியோர்க ணிமலன்றாளைக், கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங் கிடைக்குங்காம, வெட்டையிலே மதிமயங் குஞ் சிறுவருக்குமணம்பேசி விரும்பித்தாலிக், கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே கிடத்துமட்டுங் கவலைதானே.

அன்னம்பழித்தநடை யாலம்பழித்தவிழி யமிர்தம்பழித்தமொழிகள், பொன்னம்பெருத்தமுலை கன்னங்கறுத்தகுழல் சின்னஞ்சிறுத்தவிடையாள், என்னெஞ்சுருக்கவடனனெஞ்சுகற்றகலை யென்னென்றுரைப்பதினிநான், சின்னஞ்சிறுக்கியவள் வில்லங்கமிட்டபடி தெய்வங்களுக்கபயமே. ()

கொங்குதேர்வாழ்க்கை யஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ

பயிலிய துகெழீஇயகட்பின்மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே. (௧௯௪)

உள்ளவழக்கிருக்க வூரார்பொதுவிருக்கத்
தள்ளிவழக்கதனைத் தான்பேசி - எள்ளளவும்
கைக்கூலிதான்வாங்குங் காலறுவன்றன்கிளையும்
எச்சமறுமென்றுரை லறு. (௧௯௫)

கல்வியுடையீர் கருங்கானகத்திடையே
நெல்லியிலையுதிர்ந்து நிற்பதெவன் - வல்லாய்கேள்
வெல்லாவழக்கை விலைவாங்கிவெல்விக்கும்
வல்லாளன்சுற்றம்போன் மாண்டு. (௧௯௬)

வழக்குடையானிற்ப வலியானைக்கூடி
வழக்கைபழிவழக்குச் செய்தோன் - வழக்கிழந்தோன்
சுற்றமுந்தானுந் தொடர்ந்தழுதகண்ணீரால்
எச்சமறுமென்றுரை லறு. (௧௯௭)

படைதனக்குயானை வனப்பாகும்பெண்ணின்
இடைதனக்குநுண்மை வனப்பாம் - நடைதனக்குக்
கோடாமொழிவனப்புக் கோற்கதுவேசேவகர்க்கு
வாடாதவன்கண் வனப்பு. (௧௯௮)

கண்வனப்புக்கண்ணோட்டங் கால்வனப்புச்செல்லாமை
எண்வனப்பித்துணையா மென்றுரைத்தல் - பண்வனப்புக்

கேட்டார்கன்றென்றல் கிளர்வேந்தன்றன்னொடு
வாட்டானன்றென்றல் வனப்பு. (கஞகூ)

கற்புடையபெண்ணமிர்தங் கற்றடங்கினனமிர்தம்
நற்புடையநாடமிர்தந் நாட்டுக்கு - நற்புடைய
மேகமேசேர்கொடி வேந்தமிர்துசேவகனும்
ஆகவேசெய்யி னமிர்து. (உ00)

கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத் தான் கற்பித்தானு, இல்லைத்தான் பொன்னைத்தா னெனக்குத் தான் கொடுத்துத்தா னிரட்சித்தானு, அல்லைத்தான் சொல்லித்தா னுனைத்தா னேவத்தா னையோவெங்கும், பல்லைத்தான திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றுன பண்ணினனே. ()

ஆவீனமழைபொழியவில்லம்வீழ வகத்தினளேய்தனில வருந்த வடிமைசாக, மாவீரம்போகுதென்று விதைகொண் டோட வழியிலேகடன்காரர் மறித்துக்கொள்ளச், சாவோலை கொண்டொருவனெதிரேசெல்லத் தள்ளவொண்ணு விருந்து வரச் சர்ப்பந்தீண்டக், கோவேந்தர்தமதுரிமைப் பகுதிகேட் கக் குருக்கள்வந்துதட்சணைக்குக் குறுக்கிட்டாரே. (உ0உ)

தாய்பசைபிரர்கட்பாகிற் றந்தையுந்துணவாகில்
வாய்பசைப ஊைாபாரு மாவழகுற்றபோது
பேய்பசைபி ார னும் பெருமைநூல் ல்லாவிட்டால்
சேய்பசைபொ ர காகு மென்றனர்தெளிந்தநூலோர். ()

மடுத்தபாவாணர்தக்கோர் மறையவரிரப்போர்க்கெல்லாங் [ல
கொடுத்துயார்வறுமையுற்றூர்கொடாதுவாழ்ந்தவராார்மண்மே
எடுத்துநாடுண்டநீரு மெடாதகாட்டகத்துநீரும்
அடுத்தகோடையிலே வற்றியல்லதிற்பெருகுந்தானே.(உ0௪)

உணங்கியொருகான்முடமாகி யோர்கண்ணிழந்துசெவியின்றி, வணங்குநெடுவாலறுப்புண்டுவயிறுமூ றுகினுலர்ந்தொட்டி, அணங்குநல்யமூப்பெய்தி யகல்வாயோடுகழுத்தேந்திச் சுணங்கன்முடுவலதைத்தொடர்ந்தா லெவரைக்காமன்றுயர் செய்யான். (உ0௫)

கன்மனப்பார்ப்பார் தங்களைப்படைத்துக் காகத்தையென்செயப்படைத்தாய், துன்மதிவணிகர் தங்களைப்படைத்துச் சோரரையென்செயப்படைத்தாய், வன்மனவடுகர்தங்களைப்படைத்து வானரமென்செயப்படைத்தாய், நனமனைதோறும் பெண்களைப்படைத்து நமனையென்செயப்படைத்தனையே.()

கொல்லுலைவேற்கயற்கண் கொவ்வையங்கனிவாய்மாதே
நல்லணிமெய்யிற்பூண்டு நாசிகாபரணமீதிற்
சொல்லரிற்குன்றிதேடிச் சூடியதென்னேவென்றான்
மெல்லியகண்ணும்வாயும் புதைத்தனள்வெண்முத்தென்றான்

அருகிலிவளருகிலிவளருகில்வரவுருகும்
கரியகுழன்மேனியிவள்காணமயிலசாயல்
பெரியதனமிடைசிறிது பேதையிவளோயோ
தெருவிலிவணின்றநிலை தெய்வமெனலாமே. (உ0௮)

அருகிலிவளருகிலிவ ளருகில்வரநாறும்
கரியகுழன்மேனியிவள் காட்டெருமைச்சாயல்
பெரியவிடைசிறியதனம் பேய்க்கழுதையையோ
தெருவிலிவள்நின்றநிலை செக்குமரமாமே. (௨0௯)

அலருவாள்விழியாயிழைநன்னுதல்
திலகங்கண்டெதிர் செஞ்சிலைமாரனுங்
கலகமேசெயுங் கன்னிதுவாமென
மலரம்பைக்கையும் வைத்துவணங்கினன். (௨௧0)

குரங்குநின்றுகூத்தாடிய கோலத்தைக்கண்டே
அரங்குமுன்னிநாய்பாடிக் கொண்டாடியதுபோல்
கரங்கணீட்டியேபேசிடு கசடரைக்கண்டு
சிரங்களாட்டியே மெச்சிடுமறிவிலார்செய்கை. (௨௧௧)

கழுதைகாவெனக்கண்டு நின்றாடியவலகை
தொழுதுமீட்டுமக்கழுதையைத் துதிசெயவதுதான்
பழுதிலாநமக்கார் நிகராமெனப்பகரும்
முழுதுமூடரைமூடர் கொண்டாடியமுறையே. (௨௧௨)

வில்லதுவளைந்ததென்றும் வேழமதுறங்கிற்றென்றும்
வல்லியம்பதுங்கிற்றென்றும் வளர்கடாபிந்திற்றென்றும்
புல்லர்தஞ்சொல்லுக்கஞ்சிப்பொறுத்தனர்பெரியோரென்றும்
நல்லதெனநிருக்கவேண்டா நஞ்செனக்கருதலாமே. (௨௧௩)

ஆதியாமிருவர்நட்புக் கவமதிப்புற்றவர்க்குச்
சூதினர்கபடஞ்செய்து துணைபிரிந்திடுவரென்றார்

வேதியன்பவனவாயில் வேசைதாப்பச்சைநாவி
பூதியகதைபோலாகி யுறுநரகெய்துவாரே. (உகச)

அருமையும்பெருமைதானு மறிந்துடன்படுவர்தம்மால்
இருமையுமொருமையாகு மின்புறற்கேதுவுண்டாம்
பரிவிலாச்சகுனிபோலப் பண்புகெட்டவர்கடம்பால்
ஒருமையினிரயமெய்து மேதுவேயுருமன்றே. (உகரு)

விஞ்சையராருமைதன்னை விஞ்சையரறியவேண்டும்
புன்செயலறிவிலீனர் புகழ்ந்ததையறியாரென்போல்
விஞ்சியமகப்பெருளவ் வேதனைமலடிதானும்
கிஞ்சிதமறிந்திடாள்போ லிருந்திடுங்கேள்விதானே. (உகசு)

வாழ்வதுவந்தபோது மனந்தனின்மகிழவேண்டாம்
தாழ்வதுவந்ததானுற் றளர்வரோதக்கோர்மிக்க
ஊழ்வினைவந்ததானு லொருவரால்விலக்கப்போமோ
ஏழையாயிருந்தோர்பல்லக் கேறுதல்கண்டிலீரோ. (உகஎ)

பருப்பதங்கள் போனிறைந்திடு நவமணிப்பலன்களைக் கொடுத்தாலும், விருப்பநீங்கியகணவரைத்தழுவுதல் வீணதாம்விரையார்ந்த, குருக்கொள்சந்தணக் குழம்பினையன்போடு குளிர்தரவணிந்தாலும், செருக்குமிஞ்சியவற்டார்தந் தோழமை செப்பவுமாகாதே. (உகஅ)

பெருத்திடுசெல்வம் தூற்றபோதுகண்
ருத்தெரியாமலே யொளிமழுங்கிடும்

மருத்துளதோவெனில் வாகடத்திலை
தரித்திரமென்னுமோர் மருந்திற்றீருமால். (உககூ)

சொல்லுவார்வார்த்தைகேட்டுத் தோழமையிகழ்வார்புல்லர்
நல்லவர்விசாரியாமற் செய்வரோநரிசொற்கேட்டு
வல்லியும்பசுவுங்கூடி யாண்டதோர்கதையைப்போல
புல்லியரொருவராலே போகுமேயற்பர்நேசம். (உஉ0)

கதலிவீரர்களத் திடைவையினும்
குதலைவாயிற் குழவிகள்வையினும்
மதனலீலையின் மங்கையர்வையினும்
இதமுறச்செவிக் கின்பம்விளையுமே. (உஉக)

கடாவிடுஞ்சமர்க்களத்தினும் மடந்தைபரிடத்தும்
விடாமலோதியகவிதை பாராட்டியவிடத்து
நடாவிடுஞ்சிறுபிள்ளைக ணவிலுமவ்விடத்தும்
அடாவெனுஞ்சொலலை யின்சொலாய்மதிப்பர்கற்றறிந்தோர்.

புத்திமான்பலவானவான் பலமுளான்புத்தியற்றால்
எத்தனைவிதத்தினாலு மிடரதுவந்தேதீரும்
மற்றொருசிங்கந்தன்னை தருமுயலகூட்டிச்சென்றே
உற்றதோர்கிணற்றிலசாயல் காட்டியவுவமையேபோல். ()

மானமுள்ளோர்கடன்றேர் மயிரறினுயிர்வாழாத
கானுறுகவரிமான்போற் கமைபெறுபுகழேபூண்பார்
மானமொன்றில்லார்தாமு மழுங்கலாசிழுங்கலாகி
ஈனமாங்கழுதைக்கொப்பா யிருப்பரென்றுரைக்கலாமே. (

எண்ணான்குமுப்பத் திரண்டுபற்காட்டியிசைவுடனே
பண்ணாகிச்செந்தமிழ்ப் பாடிவந்தாலுமிப்பாரிலுள்ளோர்
அண்ணாந்துகேட்ப ரழகழகென்பரதன்பிறகு
சுண்ணாம்புபட்டவிலையுங்கொடார் கவிசொன்னவர்க்கே. ()

ஆசாரஞ்செய்வாராகி லறிவொடுபுகழுமுண்டாம்
ஆசாரநன்மையாலு லவனியிற்றேவராவர்
ஆசாரஞ்செய்யாராகி லறிவொடுபுகழுமற்றுப்
பேசார்போறபேசுமாகப் பிணியொடுநரகில்வீழ்வார். (௨௨௬)

செல்வம்வந்துற்றபோது தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வதையறிந்துசொல்லார் சுற்றமுந்துணையும்பேணார்
வெல்வதேகருமமல்லால் வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவும்பாரார் மண்ணின்மேல்வாழுமாந்தர். ()

இறந்தபிறப்பிற்றுஞ் செய்தவினையைப்
பிறந்தபிறப்பாலறிக-பிறந்திருந்து
செய்யும்வினையாலறிக வினிபிறந்
தெய்தும் வினையின் பயன். (௨௨௮)

கார்படைத்த கரதலத்தான் றுரைவேங்கட மளித்தக
ண்ணு வெங்கும், பேர்படைத்தவானந்த ரங்கமகிபாலரின்
பிரம்பூர்நாட்டில், நேரிழைக்குவிழியேழு முலையாறுகா
ைதந்துநெற்றிநான்கு, பாரிடத்திலிப்புதுமைக் கண்டுவந்தே
னிதன்பயனைபகர்ந்திடாயே. (௨௨௯)

சலந்தனிற்கிடக்குமாமை சலத்தைவிட்டகன்றபோது
கொலைபுரிவேடன்கண்டு கூரையிற்கொண்டுசெல்ல
வலுவினாலவனைவெல்ல வகையொன்றுமில்லையென்றே
கலையெலிகாகஞ்செய்த கதையெனவிளம்புவோமே (௨௯0)

நிலமதிற்குணவானறோன்றி னீள்குடித்தனரும்வாழ்வார்
தலையெலாம்வாசந்தோன்றுஞ் சந்தனமரத்திற்கொப்பாம்
நலமிலாக்கயவனறோன்றி நன்குடித்தேசம்பாழாம்
குலமெலாம்பழுதுசெய்யுங் கோடரிக்காம்புநேராம். (௨௯௧)

உரமுடன்மொழிவார்வார்த்தை யுறுதியுமில்லைகண்டாய்
மரமதிற்கீழேயாடும் வானவானரத்தைமானும்
புரமதினுமலிகாவிற் பூட்டியமணிபோலாடும்
தரமிலானமொழியும்வார்த்தை தங்கத்தின்கட்டிபோலாம். ( )

நட்பிடைக்*குய்யம்வைத்தார் பிறர்மனைநலத்தைச்செய்வார்
கட்புடைக்காமத்தீயாற் கன்னியைவிலக்கினோரும்
அட்டடனஞ்சுகின்றோ ராயுளுங்கொண்டுநின்று
குட்டநோய்நரகில்வீழ்ந்து குளிப்பவரிவர்கள்கண்டாய். ( )

மதியிலாமறையோன்மனனன் மடந்தையைவேட்கையாலே
ருதுவதுகாலந்தன்னி றோஷமென்றுரைத்தேயாற்றிற்
புதுமையாயெடுத்தபோது பெட்டியிற்புலிவாயாலே
அதிருடன்கடியுண்டன்றே யருநரகடைந்தான்மாதோ. ( )

---

* குய்யம்-வஞ்சனை.

மையதுவல்லியம்வாழ் மலைக்குகைதனிற்புகுந்தே
ஐமுகன¶புலியுங்காட்டி படவியிற்றுரத்துங்காலை
பையவேசரிக்கோலாலே படுபொருளுணரப்பட்ட
வெய்யவம்மிருகந்தானே கொன்றிடவீழ்ந்ததன்றே. (௨௩௫)

ஒருவனையிரண்டியாக்கை யூனபொதியானதாற்றம்
உருவமும்புகழுமாகு மதற்குணியின்பமுற்று
மருவியயாக்கையிங்கே மாய்ந்திடுமற்றுயாக்கை
திறமதாயுலகமேற்றச் சிறந்துபின்னிற்குமன்றே. (௨௩௬)

வேலியானதுபயிர்தனை மேய்ந்திடவிதித்தாற்
காலனானவனுயிர்தனைக் கவர்ந்திடநினைத்தாற்
ஆலமன்னையர்பாலகர்க் கருத்துவராறல்
பேலிதோர்ந்துடன்யார்கொலோ விலக்குவர்வேந்தே. ()

அறங்கெடுநிதியுங்குன்று மாவியுமழியுங்காயம்
திறங்கெடுமதியும்போகு நீண்டதோர்நரகிற்சேர்க்கும்
மறங்கெடுமறையோர்மன்னர் வணிகர்நல்லுழவோரென்று
குறங்கெடும்வேசைமாதர் குணங்களைவிரும்பினோர்க்கே. ()

பொருளொன்றுநான்றந்ததிவட் கதற்கில்லாமையினி பொய்புரட்டு, மருளொன்றுகட்காமங்கொலை களவுசூதுவ சைமரணத்தோடும், இருளொன்றுநரகமினனுமிவள்பாலுங கொண்டதற்கோரிலக்கமுண்டோ, தெருளொன்றும்பாரின ப்போற்சமத்தாக் கொண்டெவர்வணிகஞ் செய்யவல்லார். ()

¶ ஐமுகன்-பஞ்சமுகன் (அதாவது) சிங்கம்.

பசையறவெம்மாவியன்னுள்கைப் பொருளெலாம்பறிக்கப் பசியானுன்கு, திசைமுகமுநோக்கலாற் றிசைமுகனுனும்வாயிற் றீயாளிட்ட, வசையானமண்ணுண்டு மாயனுனுங்கையில் வாங்குமோட்டால், இசைமேவுமீசனுனும் புவியினமையொப்பா ரெவர்தாமம்மா. (உச0)

ஆத்தமனையாளகத்தி லிருக்கவே
காத்தமனையாளைக்கா முறுங்காளையர்
காச்சபலாவின் கனியுண்ணமாட்டாம
லீச்சம்பழத்துக் கிடருற்றவாறே. (உசக)

அரவிந்தநண்பன்சுதன்றம்பி மைத்துனனண்ணன்கையில்
வரமுந்தியாயுதம்பூண்டவன் காண்மற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தினன் மைந்தன்பகைவன்வெற்பை
யுரமென்றெடுத்தவன் மாற்றான்றன்சேவகனெண்டொடியே.

இந்திரன்பதங்கள்குன்று மிறையவர்பதங்கண்மாறு
மந்தரநிலைகள்பேற மறுகயல்வறுமையாகும்
சந்திரன்கதிரோன்சாயுந் தரணியிற்றேயமாளும்
அந்தணர்கருமங்குன்றில் யாவரேவாழ்வார்மண்ணில். ()

என்னனைக்கன்றுமுத்தனைக் குனிக்குமிறையனையனைக்குமேயன்று, மன்னனைக்கன்றிப்பின்னனைக்குதவாவன்புளால் வருந்திவாடுவனே, முன்னனைக்கொன்று பின்னனைப்புரந்த முதுபகையவன்பிதாவுறுமல், கன்னனைக்கொன்றுவிஜயனைப் புரந்த கவுத்துவாகாயலாதிபனே. (உசச)

பண்புடையர்க்கோர்பறவை பாவத்திற்கோரிலக்க
நண்பிலரைக்கண்டக்காற்காலி-திண்புவியை
யாள்வார்மதுரை யழகியசொக்கர்க்காவம்
நீள்வாகனநன்னிலம். (௨௪௫)

சிறுவனளாபயறு செங்நெற்கடுகு
மறிதிகிரிதண்டுமணிநாற்-பொறியாவம்
வெற்றேறுபுள்ளன்னம் வேதனரனமாலுர்க்குக்
கற்றூழம்பூவேகறி. (௨௪௬)

சிரம்பார்த்தானீசனயன் றேவிதனைப்பார்த்தான
கரம்பார்த்தான்செங்கமலக்கண்ணன-உரந்தசேர்
மலைவெளுத்ததிண்புயத்து வண்ணான்சிராமன
முலைவெளுத்தசேத்திதனைக்கண்டு. (௨௪௭)

காலையிலும்வேலை கடையக்கயிருகு
மாலையிலும்பூமுடித்துவாழுமே-சோலையிலும்
செய்யிலாரந்திகழுஞ் செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலார்மெய்யிலிடும்பூண். (௨௪௮)

கரியொன்றுபொன்மிகும் பையேறக்கற்றவர்சுற்றுக்தொழு
எரியொன்றுசெல்வன் றுலாத்தினிலேற விருண்டமஞ்சு
சொரிகின்றநாகமின்சோற் றினிலேறித்தொடர்ந்துவா
நரியொன்றுசொந்தக் கனலேறிவந்ததுநங்களத்தே. (௨௪௯)

ஒருபாதிமால்கொளமற் றொருபாதியுமையவள்கொண்
-ருபாதியாலுமிறந்தானபுராரி-யிருநதியோ

பெருவாரிதியிற்பிறைவானி ஞகம்பிலக்குழியிற்
றருராசபோச கொடையுன்கையோடெண்கைதந்தனனே.

தடாரிதண்ணுமைபேரிகை சல்லரிடக்கை
கடாகமெங்கணு மதிர்ந்திடவொலித்திடக்கானல்
விடாததாணகன்றன்னிய புருடனைவிழைந்தே
அடாதுசெய்தமங்கையர் வசையொலித்தல்போலாமால். ()

பத்தினிபத்தர்கள் தத்துவஞானிகள்
சித்தங்கலங்கச் சிதைவுகள்செய்தவ
ரத்தமுமாவியுமாண் டொன்றின்மாய்ந்திடுஞ்
சத்தியமீது சதாநந்திதானே. (உ௫உ)

ஒரெழுத்தொரு பொருளுணரக்கூறிய
சீரெழுத்தாளரைச் சிதையச்செப்பினோ
ரூரிடைச்சுணங்கனுய்ப் பிறந்தங்கோருகம்
பாரிடைக்கிரிமியாய்ப் படிவர்மண்ணிலே. (உ௫௩)

கல்லாவரசனுங் காலனுநேரொக்குங்
கல்லாவரசனிற் காலன்மிகநல்லன்
கல்லாவரசனறமோரான்கொல்லென்பான்
நல்லாரைக்கால னணுகிலிலானே. (உ௫௪)

ஆசையெனும்பாசத்தா லாடவர்தஞ்சிந்தைதனை
வீசமனையாந்தறியில் வீழ்த்தியே-மா[illegible]புரி
மாயாமனைவியரா மக்கண்மகவென்னு
நாயாற்கடிப்பித்தநாடு. (உ௫௫)

கொழுநனைப்பழித்தகோதை குழவியைக்கணவனேந்தி
யழுமதற்கிரங்கியாற்ற வவள்நகைத்திடுதல்போல
எழுதுமுத்தமிழோர்க்கீயா ரிருநிதிதன்னைத்தேடிப்
பழுதறப்புதைப்பக்கண்டு பார்மகள்நகைக்கின்றாளே. ()

மன்னவன்கணக்கன்பார்ப்பான் வலுவுள்ளோன்மந்திரவாதி
பொன்னுளவன்குருக்கள் புலவன்பண்டிதனமைச்சன்
அன்னஞ்செய்திடுவோனென்று மடங்காததுட்டராமிப்
பன்னிருபேரோடென்றும் பகைகனவிலுங்கூடாதே. (உருஎ)

புலியொடுபுல்வாய்தானும் பொருந்தியேயுறவானாலும்
எலியொடுபூனைகூடி யிசைந்துநன்குறவானாலும்
நலமிகுசர்ப்பங்தேரை நன்றதாயுறவானாலும்
[illegible]மின்மேலவரோடற்ப மதியினருறவாகாரே. (உருஅ)

தெருளுறக்கற்றிலார் செருக்கிலாததும்
பொருளிலாவறிஞர்தம் பொறியடக்கமும்
மருளுறுமூகர்த மௌனசாதமும்
உருவிலாமடந்தையர் கற்புமொக்குமால். (உருகூ)

தன்னைத்தான்பேணாதாலுஞ் சரீரத்தின்றண்டிப்பாலும்
பின்னுற்றவிசாரத்தாலும் பின்சலமலத்தினாலும்
அன்னத்தையொருப்பதாலும் அடைவுடன்முழுகலாலுந்
தன்மத்தையிகழ்வதாலும் சரீரத்தில்வியாதிதோன்றும். ()

ஆட்டுவாணிபனுலிங்கனத்திலும்
கூட்டுவாணிபன் கைக்குட்டுநன்றதா

மோட்டுமாதர் முயக்கிற்சரசமே
காட்டுமாதரைக்காணலுநல்லதே. (உகூக)

கவளமுண்களிப்புக்கொள்ளும் காலையில்வாயிற்சிந்தித்
தவறியபருக்கையாலத் தந்திக்குச்சேதமுண்டோ
உவமையிலெறும்புகோடி யுடலதுநிறையுமென்னில
தவமதையறிந்தபேர்கள் தாங்குவாரிளைத்தோர்தம்மை. ()

பேடையைப்பிடித்துத்தன்னைப் பிடிக்கவந்தடைந்தபோது
வேடனுக்குதவியாக விறகிலுல்வெந்தீமூட்டிச்
சாடுறும்பசியைநீக்கித் தன்னுயிர்கொடுத்தபைம்புள்
வீடுபெற்றுயர்ந்தவார்த்தை வேதத்தில்விழுமிதன்றே. ()

ஏர்பெறுமிருநிதிச் செருக்கதெய்திடிற்
நேர்செவியுடையவர் செவிடராகுவர்
சீர்தருமுரைவலா ரூமையாகுவர்
கூர்விழியுடையவர் குருடராவரே. (உகூச)

திரவியம்வந்தபோதுசேர்ந்தபல்லோர்க்குமீந்தால்
வரவரவளமாமந்த வகைசெயாவிடிற்கெட்டேகும்
ஒருகலிங்கினைவிட்டக்கால் ஓதநீர்போக்குப்போகப்
பெருகுருமேரிவில்லா விடுனடுவணையைப்போக்கும். ()

கோடிபொன்னளிப்பனின்றே கோடிரோர்மாத்திரைக்குள்
ளாடியகிளைக்கோர்வார்த்தை யுரைத்திடைகுவனென்றாலும்
தேடியகாலதூதர் சிமிழ்த்தல்விட்டொழிவரேகொல்
வாடியமருங்குனங்காய் மாண்பொருட்பயன்கண்டாயோ.

கைதவமிழைத்தலுங் களவுசெய்தலு
மைதுயிர்கோற மறத்தைக்கோறலும்
பொய்தவ வுரைத்தலும் பொருளிழத்தலும்
எய்தியகாமத்தி னன்றியில்லையே. (உகள)

நன்றியைக்கோறலு நலனைக்கோறலும்
வென்றியைக்கோறலும் விவேகங்கோறலுந்
துன்றியவொக்கலைத் துறந்துநின்றலுங்
கன்றியகாமத்தி னன்றியில்லையே. (உகஅ)

பகைபிணையாக்கலும் பாவமாக்கலு
நகைபிணையாக்கலு நவையையாக்கலுந்
திகைமனமாக்கலுஞ் சிறுமையாக்கலு
மிகைதருகாமத்தி னன்றியில்லையே. (உகக)

பொன்னகர்விட்டே கங்காநதியிடைபோந்தோரோதிம மம் புவியிற்புனலிடை வந்ததுகண்டே புடைசூழ்ந்தே*பக மும், உன்னிருதுண்டங்கால்பவளம்போ லுற்றுயிதென்ன ஓதிமமும்மூரெவ்வூரெம்மூரும்பர்வளம்பதியாம், அந்நகர்தனி லேயேதுண்டதிசயமம்பொற்புடபமுட னணியார்தரள பவ ளங்களுமுண்டதுமற்றல்லாதே, இந்நகர்தனிலுளநத்தைகள் தாமங்விலேயோவஃதறியோ மிஃதறியா மற்றெஃதறிவாயென் றேநகைசெய்ததுவே. (உஎ0)

நாரியின்முடிமேல்வையமும் வையநடுவினிற்சிலையுமச் சிலையிற், பாரியவுருளுமுருளினிற்கணையும்பகழியிற்பாகனும்

* பகம்-கொக்கு.

பாகன், சிரியமுகத்திற்றுரங்கமுந் துரங்கச் சிகையினிற்றலை வனுமாக, போரியலவுணர்புரஞ்செறு மாற்றல்புகனுறிற்புன் சிரிப்பாமால். (உஎக)

பல்லெலாந்தெரியக்காட்டிப் பருவரன்முகத்திற்கூட்டிச்
சொல்லெலாஞ்சொல்லிநாட்டித் துணைக்கரம்விரித்துநீட்டி
மல்லெலாமகலவோட்டி மானமென்பதனைவீட்டி
யில்லெலாமிரத்தலந்தோ விழிவிழிவெந்தனூன்றும். (உஎஉ)

தேற்றமுற்பவத்திற்செய்த தீங்குநன்கெனுமிரண்டு
மாற்றல்சால்கருமமென்ப ரக்கருமத்தைநோக்கிச்
சாற்றுமிப்பிறப்பிற்றக்க தரித்திரஞ்செல்வநல்கிப்
போற்றுவனுயிரையெல்லாம் பொலிசுடர்த்திகிரிவள்ளல்

அலரவன்றீட்டிவைத்த வாயுளினளவுகாறும்
விலகிலாவினைக்குத்தக்க விருப்புறுவெறுப்புறுவு
மிலகவுண்டின்றேலினறு மின்னுயிருடம்பின்வாழ்தன்
மலர்தலையுலகத்தென்று வகுப்பர்நூலுணர்ந்தவல்லோர். ()

வளநிதிபடைத்தோமென்றும் வடிவவில்லுடையோமென்று
மளவில்சேயீன்றோமென்று மனுபவத்தமைந்தோமென்று
மிளமையிற்சிறந்தோமென்று மெழிநலமுடையோமென்று
முளமகிழ்கூர்வர்சற்று முண்மைநூலுணர்ச்சியிலலார். ()

ஓடும்பொன்னுமுறவும்பகையுமோர்
கேடுஞ்செல்வமுங்கீர்த்தியுங்கிந்தையு
வீடுங்காணமுப்வேறறநோக்குதல்
கூடுந்தன்மைகொளுமணநன்மனம். (உஎ)

தோன்றுகுணங்கள்பதின்மூன்றுநீக்கிப்பின்
மூன்றுகுணங்கொள்வோருந்தீபற
முமூட்சுக்களாவாரென்றுந்தீபற. (உஎஎ)

அரியணையிலிருந்துலகவரசாக்ஷிபுரிந்தாலுமங்கையேற்றுத், தெருவுதொறுந்திரிந்திரந்துதின்றாலுமிளம்பருவத்தெரிவைமாரைப், பிரியாமலிருந்தாலும் பிரிந்துதவம்புரிந்தாலும் பேசிற்றெல்லாம், விரிசிவமுத்தனுக்கிங்குடம்பாடே யன்றி யொன்றும் விரோதமின்றே. (உஎஅ)

சொல்லாமலேபெரியர் சொல்லிச்சிறியர்செய்வர்
சொல்லியுஞ்செய்யார்கயவரே—நல்ல
நலமாலைவேற்கண்ணாய் கூறுவமைநாடிற்
பலாமாவைப்பாதிரியைப்பார். (உஎகூ)

ஆலைப்பலாவாக்கலாமோ வருஞ்சுணங்கன்
வாலைநிமிர்க்கவசமாமோ—நீலநிறக்
காக்கைதனைப்பேசுவிக்கலாமோ கருணையிலா
மூர்க்கனைச்சீராக்கலாமோ. (உஅ0)

ஆங்காலமெய்வருந்தவேண்டா மதேதெனனிற்
றேங்காய்க்கிளநீர்போற்சேருமே—போங்காலம்
காட்டானையுண்டகனி யதுபோலாகுமே
தாட்டாளன்றேடுந்திரம். (உஅக)

கல்வியுடையீர் கருங்கானகத்திடையே
நல்லிபிலையுதிர்ந்துநிற்பதெவன்—வல்லாய்கேள்

வெல்லாவழக்கைவிலைவாங்கிவெல்விக்கும்
வல்லாளன்சுற்றம்போன் மாண்டு. (௨௮௨)

அஞ்சக்கரமென்னுங் கோடாலிகொண்டிந்தவைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டை வேரறவாட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச் சதாசிவமென்கின்றவித்தையிட்டும்
புஞ்சக்களைபறிந்தேன் வளர்த்தேன்சிவபோகத்தையே. ()

குரங்கன்வில்வீழ்ந்து வெறிகொண்டுதேள்கொட்டக்
காஞ்செறியப்பாம்பலவுங்கவ்வி—விரைந்துபேய்
பற்றவேகள்ளூண்டு பச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார்சேட்டைக்கிடம். (௨௮௪)

அரும்பாலநாமுனம்பூமணஞ்சொற்பொருளாகமுயிர்
கரும்பாஞ்சுவையெள்ளுமெண்ணெயும்போலொத்தகாதலரை
ப், பெரும்பாவினலலன்னங்கங்காசலத்தைப்பிரிப்பதுபோல,
சுரும்பாம்புலவர்யமனூலை செக்கெனத்தோன்றினையே. ()

பாண்டியன்மாலைகொண்டாய் மகளேநினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோ வெண்ணெயேதிருடித்
தாண்டிக்குநிந்தகற்கோதண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந் தாதனிருப்பிடமானபின்னே. (௨௮௬)

கொன்றிலாரைக்கொலச்சொலிக்கூறினோர்
தின்றிலாரைத்தினச்சொலித்தெண்டித்தார்
பன்றியாய்ப்படியிற்பிறந்தேழ்நரா
கொன்றுவாராணையீதுண்மையே. (௨௮௭)

சோமனுடாவாழ்வுஞ்சோறிடாதல்லுறவும்
நாமநீறில்லாதநன்னுதலும்—ஓம
நெருப்பில்லாவேதியருநெய்பாலுடனே
பருப்பில்லாப்போசனமும்பாழ். (உ௪அ)

மண்போற்பொறுமை யுடையோரும் மதிபோற்சாந்த முடையோரும், புண்போலுடலைப்புனைந்தோரும்புனல்போலொழுக்கம்பூண்டோரும், கண்போலிரக்க முடையோருங் கனல்போற்புசிக்குங்கதியோரும், விண்போலறிவையறிந்தோரும் பிறவாரிந்தமேதினிக்கே. (உ௪௯)

பொன்போலவிலங்கு . ஞ் சஞ்சலத்தாற்றுங்காம்
உ புத்திவிசாரித்தறியும்போலிவதனைலைரவாங்
ன்போலவிலையெனலா லகங்காரமதமாந்
தனைநிகாஞ்சித்தமொரு தன்மையினுையா
மின்போலுஞ்சலனமனமைையாமனிறுத்தி
விசாரிக்கும்புத்தியினைமெய்ப்பொருட்பால்விடுத்து
வன்போடுவருமகங்காரத்தினையுங்கடிந்தால்
வைத்தவிடத்திருக்குசித்தமகத்துவமுந்தருமே. (உ௫0)

மாயையேயுடலமாகு மாயையேகாணமாகு
மாயையேபுவனமாகு மாயையேபோகமாகு
மாயையேபொறிகளாகு மாயையேபுலன்களாகு
மாயையேயண்டபிண்டம் மாவையுமாயையாமே. (உ௫௧)

மாரியைநோக்கும் வனப்புட்போலும்
மாரியைநோக்கும் பாவலர்போலும்

கொழுநனைநோக்குங் குலமகள்போலுந்
தேசியைநோக்குஞ் சீடன்றெரிவே. (உகஉ)

பாலனானபருவம்போம் பன்னுகுமாரப்பருவம்போங்
கோலமானதருணம்போங் கோலையூன்றிக்குனிந்தெழுந்து
காலன்மாய்க்கவனைவர்களுங் கல்லென்றழுதுபேர்மாற்றி
ஏலப்பிணமென்றொருபெயரிட் டிடுகாட்டிடுதலொருதலையே.

இட்டமிகுமிளமைநல மீரையாண்டதனி
லிருபதினில்வளர்ச்சியு முப்பதுவருடத்தழகு
முட்டகையமேதையு நாற்பதுவருடத்துடலி
லொண்பலமுமைமபதினி லறுபதினிற்றூதுந்
திட்டியுமங்கெழுபதினி லெண்பதினிற்செவியுந்
திகழ்மனமுந்தொண்ணூறிற் சீவனுநூறளவில்
விட்டகலுமிரவியுதித் தொடுங்குவதெனவுணர்ந்தோர்
வீணாள்பட்டொழியாமல விரும்புவர்நற்றவமே. ()

கருவினின்றுமழிந்துபோங் கணடகுழந்தையினுங்குமரப்
பருவந்தனிலும்போந்தருணப் பருவந்தனிலுமழிந்துபோ
முருவநடுங்குமூப்பதினு மோடுங்குமெந்தக்காலையினு
மொருவியழிதலியல்பாகு முலகத்துடலின்வாழ்க்கையுமே.

ஆக்குபஞ்சாக்கர மிலலாதநாவுக்குமன்னையற்ற
சேய்க்கும் பசியற்ற நேரத்திலுாணுக்குஞ் சீவித்தின்றுப
பாக்கும் பெண்பாலற்ற நித்திரைக்கும் புதுப்பானைபுகு
மீய்க்குஞ் சுகமுமுண்டோ வெள்ளைநாவ விருப்பவனே.

ஆந்தைவீச் சிட்டதுவு மம்மறவன் கொன்றதுவுஞ்
சார்ந்திருந்தோரோடிப்போய்ச் சாற்றியதும்-வேந்தன்முதல்
பண்டுள சுற்றத்தார் பரிந்தோடி வந்ததுவும்
கண்டிருந்தும் பேசுவரோ காண். (உகஎ)

அம்மாவெனவலற வாருயிரைக்கொன்றருந்தி
இம்மானிடரொல்லா மின்புற்றிருக்கின்றார்
அம்மாவெனுஞ்சத்தங் கேட்டகன்றமாதவர்க்கும்
பொய்ம்மாநிணையமெனிற் புசித்தவர்க்கென்சொல்லுவதே. ()

கலையெலாமுணர்ந் தானேனுங் கரிசறத்தெளிந் தானேனும்
மலையெனவுயர்ந் தானேனு மனமயலகன் றானேனும்
உலகெலாம் புகழப்பல்லோர்க் குதவிய கையனேனும்
கொலைபுரிந்தவிரக்கமின்றே லெழுநரகடைவனன்றே. (உகக)

கொலையிலானுதவுமன்னங் கூறிற்பேரமுதமாகும்
கொலையினனளிக்குமன்னங் கூறில்வல்விடமதாகும்
கொலையினனளிக்குமன்னங் கொடும்பவமளிக்குமூலம்
கொலைஞர்தம்மனையிலுண்பான் கொலைஞனேயாவனன்றே.

இத்திறனருள்கைப்பற்றி யுயிர்க்கெலாமிதத்தைச்செய்க
சத்தியமிரக்கமின்றேல் முத்தியைச்சார்கிலார்சற்
பத்தியாலியோகஞ்சாரும் யோகத்தாற்பரமஞானம்
சித்தியாமிதற்காதாரஞ் சீவகாருண்யமன்றே. (௩0௧)

அவரவர்வினையி னவரவர்வருவா ரவரவர்வினையளவுக்
அவரவர்போக மென்றதேயாயி னொருக்கார் துணையதாகு

வர்கள், அவரவர்தேக முளபொழுதுடனே யாதரவாரெண ாடி, அவரவரடைத னெறிகன்மத்தடையு மாதரவாதர வாமோ. (௯0உ)

நடலைவாழ்வுகொண் டென்செய்திர்நாணிலீர்
சுடலைசேர்வது சொற்பிரமாணமே
கடலினஞ்சமு துண்டவர்கைவிட்டா
லுடலினுர்கிடந் தூர்முனிபண்டமே (௯0௯)

ச ர்ளிக்குமாலாக்கி காற்குவிலங்காக்கிப்
பிள்ளைக்கடையாணிப் பின்னிறுக்கிப்-பொல்லாக்
கடுமிடற்றன்சோணேசன் கற்பித்துயிரைப
படுகுழியிற் பாச்சுவதைப பார். (௯0௪)

எல்லார்க்குநல்லவனிங்கில்லை யங்கில்லையெங்குமில்லை
எல்லார்க்குநல்லவன் சந்திரனுயினுமேந்திழைபா
ரெல்லார்க்குநலலவனு யேயிருந்திலனென்றிகழ்வா
ரெல்லார்க்குநல்லவனீயே புகழ்க்கச்சியேகம்பனே. (௯0௫)

வீட்டுத்தலைவனின்ருள் வணங்கார்தம்விரிதலைசும்
பாட்டுத்தலைபட்டிபாட்டுந் தலைபுன்வராகத்தலை
யாட்டுத்தலைவெறிநாய்த் தலைபாம்பினடுந்தலைகற்
பூட்டுத்தலைவெம்புலைத்தலை நாற்றப்புழுத்தலையே. (௯0௬)

பகுதிதகுதி விகுதியெனும்பாட்டில்
இகலிலிடையை யிரட்டிக்-தகவி
னருச்சித்தானமுன்னு மதுநடையாங்கண்டீர்
திருச்சிற்சபையானைத் தேர்ந்து. (௯0எ

கங்கையிற்படிந்திட்டாலும் கடவுளைபபூசித்தாலும்
மங்குலபோற்கோடி தானம் வள்ளலாய்வழங்கினாலும்
சங்கையில்லாதஞான சாஸ்திரமுணர்ந்திட்டாலும்
பொங்குறும்புலாலபுசிபபோன போயநரகடைவனன்றே. ()

வேதவாகமசாஸ்திரபுராணங்கள் விளங்கவேகறறுணர்ந்தவற்றைத், நீதறவெவர்கருக்கெளிவுறவோதிச் செப்பியவர்நெறியதனிற், சாதகமிலாகுருவிளையொருவனருனடைந்தானததம்வினவல, ஏதமாங்கழுதையினைக்குங்குமததிணியல புகேட் டிடுதலபோலனறே. (௬0௯)

எவ்வுலகும்பராபரனசந்நிதியதாகு
மிலங்குமுயிருடலனைத்து மீசன்கோயில
எவ்வுயிருமெம்முயிர்போ லெனறுநோக்கி
யிரங்காதுகொனறருந்து மிழிவினோரை
வவவியெமதூதருந் தண்டஞ்செயது
வல்லிரும்பை யுருக்கியவர்வாயிலவார்த்து
வெவ்வியதீயெழுநரகில வீழ்த்திமாறு
வேதனைசெய்திடுவரென வோதுநூலே. (௬௧0)

எப்பிறபபாயினுமே மாபபொருவதற்கு
மக்கட்பிறப்பிற் பிறிதிலலை-யபபிறப்பிற
கற்றலுங்கற்றவை கேட்டலுங்கேட்டதன்க
ணிற்றலுங்கூ டப் பெறின். (௬௧௧)

தாழ்ந்தவருணத்துதித்தோருந் தக்கோராவரொழுக்கத்தால
வீழ்ந்தவொழுக்கத்தாரிழிவர்மேலாம்வருணததுதித்திடினுஞ்

சூழ்ந்ததுணையாஞ்சிறப்பின்பஞ் சுரக்குமதனு லுயிர்தனினும்
வாழ்ந்தவொழுக்கமோம்பிடுக வழுக்கினிடும்பையேதருமே.

இந்திரியக்குஞ்சரத்தை ஞானவிருங்கயிற்றாற்
சிந்தனைத்தூண்பூட்டித் திதிபெறப்பந்திப்பா
ரிம்மைப்பயனுமினிச் செல்கதிப்பயனுந்
தம்மைத்தலைப்படுப்பார். (௩கங)

இளையானடக்க மடக்கங்கிளைபொரு
ளில்லான்கொடையே கொடைப்பயன்-எல்லா
மொறுக்குமதுகை யுரனுடையாளன்
பொறுக்கும்பொறையே பொறை. (௩கச)

தான்கெடினுந்தக்கார்க்கே டெண்ணற்கதன்னுடம்பி
னூன்கெடினுமுண்ணார்கைத் துண்ணற்க-வான்கவிந்த
வையகமெல்லாம் பெறினுமுரையற்க
பொய்யோடிடைமிடைந்த சொல். (௩கரு)

தானேதனக்குப் பகைவனுநட்டானுந்
தானேதனக்கு மறுமையுமிம்மையுந்
தானேதான்செய்த வினைப்பயன்றுய்த்தலாற்
தானேதனக்குக் கரி. (௩கசு)

என்புகாலாக விருதோளும்வேயுளா
வொன்பதுவாயினு மூற்றருந்-துர்பக்
குரம்பையுடையார் குடிபோக்குமாக்கிக்
கவர்ந்துண்ணிப்போந்த கழுகு. (௩கஎ)

அலகிலாமறைவிளங்கு மந்தணராகுதிவிளங்கும்
பலகலையாந்தொகைவிளங்கும் பாவலர்தம்பாவிளங்கு
மலர்குலாந்திருவிளங்கு மழைவிளங்குமனுவிளங்கும்
உலகெலாமொளிவிளங்கும் உழவருழுமுழவாலே. (கூகஅ)

கருவிநஞ்சாதிதம்மாற் காமராருயிரைக்கொல்வோர்
வெருவுறச்சூறைகொள்வோர் மேவியாறலைப்போர்கள்வ
ருருவளர்பிறனில்வேட்போ ருவர்முதலோரைக்கோறல்
பருவருபாவமன்று பயிர்களைகளைதல்போலாம். (கூகக)

மழையின்றிமாநிலத்தார்க்கில்லை-மழையும்
தவமிலாரில்வழியில்லை-தவமும்
அரசிலாரில்வழியில்லை-யரசனும்
இல்வாழ்வாரில்வழியில். (கூ௨0)

பரிசனம்பகைவர்கள்வர் படர்தருமுயிர்கடானென்
றுரைசெயைந்திடத்தினாலு முலகிடையிடையூறெய்தா
வரிசையிற்காத்துநீதி வழுக்கினார்தம்மைமொத்திக்
கரிசறப்பொருளுங்கோடல் காவலர்தருமமைந்தா.

பத்திமைசான்ற படையும்பலர்தொகினு
மெத்துணையுமஞ்சா வெயிலரணும்-வைத்தமைந்த
வெண்ணினுலவாவிழு நிதியுமிம்மூன்று
மண்ணாளும்வேந்தர்க் குறுப்பு. (கூ௨௨)

ஐயறிவுந்தம்மை யடையவொழுகுதல்
எய்துவதெய்தாமை முற்காத்தல்-வைகலு

மாறேற்குமன்னர் நிலையறிதலிம்மூன்றுஞ்
சீரேற்றபேரமைச்சர் கோள். (கூ௨கூ)

தன்னுரைகொளாத மனைவாழ்க்கையதுதன்னின்
வெங்கிரயம்வீழும் வகையேவிழுமிதம்மா
வன்னரொடுமேவியம ராடவர்தமக்குப்
பின்னுமொருகூற்று முளதோபிணியுமுண்டோ. (கூ௨௪)

பிரமசாரிவனத்துறைவோன் பேணுந்துறவிதென்புலத்தோர்
குரவர்தேவர்விருந்தொக்கல் கோக்கண்மறையோரிறந்தோர்க
ளிரவலாளருறுப்பிலர்களெய்தும் பிணியாளர்கண்முதியோர்
விரவுபாலர்சிசுதமதுமிசையோரிவரையோம்புகவே. (கூ௨௫)

பண்டோராண்பெண்ணமைத்தவ விருவருக்குமணமிய
றறிபபரனிரக்கம், கொண்டளித்தமுறைகடந்து கள்ளவழி
புணர்ச்சிசெயுங் கொடியோர்தம்மை, மண்டலமேவாய்பிளந்
து விழுங்காயோவவர்தலைமேல் வானுலாவும், கொண்டலே
பேரிடியை வீழ்த்தாயோவிதுசெய்யிற் குற்றமுண்டோ. ()

ஒருவருமறிகிலா ரெனவோரொண்ணுதல்
கரவயற்குமரனைக் கலத்தல்பூசைதன்
னிருவிழிமூடிமற் றெவர்கள்பார்வையும்
தெரிகிலாதெனப்பயன் றிருடலொக்குமே. (கூ௨௭)

உணர்வறுஞ்செல்வமு முயர்வுமேயறும்
குணமறுங்குலமறுங் கொடியரே யெலா
மணவுறாகரரூறு மாயுடேயுமால்
கணமறுமாதர்தோள் கலக்குந்தூர்த்தர்க்கே. (கூ௨

மற்றொருவனைச்சேர் மாதிறந்தாலும் வசைநிற்குமுலக முள்ளளவும், சுற்றமும்வாழ்வுந் துணையுமேநீங்குஞ் சோரநாயகனுமேமதியான், பெற்றசந்ததியு மிழிவுறுமாண்ட பின்னுறுங்கொடுவெநிரகம், சற்றுநேரங்கொள்சுகத்தினால்வினையுந் தனைமையீதரிவையீருணர்வீர். (௩௨௯)

அடுத்தநயனைநொறுந்திரிவாள் நாயகனுக்குமுன்னுண்பாளடக்கமில்லாள், கடுந்தமொழிபேசிடுவாள் சிறுதனந்தேடு வளிவளைக்கலந்துவாழ்தல், எடுத்தவிடைக்கொடியாரேதண்டலையாரேயெவர்க்கு மின்பமாகச், குடித்தனமேசெயவேண்டிப் பிடாரிதனைப்பெண்டுவைத்துங் கொண்டதாமே. ()

க்குலிற்பதிவிளங்குங கதித்திடும்பகற்காலத்தில்
செங்கதிர்விளங்குமனதிச் சிறந்திடுமுலகமூன்றும்
பொங்கியதன்மந்தாலே போனதுவிளங்குமென்றும்
வங்கிஷம்விளங்குநல்ல மகவினாறுனுமென்றே. (௩௩௧)

வாருநீரரென்னவிந்துவானென்னலும் மதிமோசம்வந்ததென்றெ வாய்குளறிமெய்யெலா நடுநடுக்குற்றுபின் வந்தகாரியமேதென, சீருலாவியகாம தேனுவேதாருவே சிந்தாமணிக்குநிகரே செப்புவசனத்தரிச் சந்திரனேயென்னலுஞ் சினக்திருகணுஞ்சிவந்து, ஆரைநீமாடுகன் மரமென்றுரைத்ததுமலாதரிச்சந்திரனென் அடாதசொற்சொற்றனை யார்க்கடிமையாயினேனும் யார்கையிற்பெண்டைவிற்றேனும், நீருமோவிக்

தவசை யென்றென்றுமீயாத தீயரைப்பாடாதருள் திருமன்
றுணடுநின்று நடமொன்றுபுரிகின்ற தென்றில்லைநடராஜனே

என்பொருளென்பொருளென்று சீவன்விடுமனமேயொ
ன்றியம்பக்கேளாய், உன்பொருளாலுலதன்மே லுன்னுமம்வ
ரைந்துளதோ வுன்றனேடும், முன்பிறந்துவளர்ந்ததுகோ
வினியுனைவிட்டகலாதோமுதிர்ந்துநீதான், பின்பிறக்கும்போ
ததுவுங் கூடவிறந்திடுங்கொல்லோ பேசுவாயே. (௩௩௩)

வான்குருவியின்கூடு வல்லரக்குத்தொல்கரையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ் செய்யரிதால்-யாம்பெரிதும்
வல்லோமேயென்று வலிமைசொலவேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன் றெளிது. (௩௩௪)

காணுமல்வேணதெல்லாங் கத்தலாங்கற்றோர்முன்
கோணுமல்வாய்திறக்கக் கூடாதே-நாணுமல
பேச்சுப்பேச்சென்னும் பெரும்பூனைவந்தாக்கால்
கீச்சுக்கீச்சென்னுங் கிளி. (௩௩௫)

கற்றதுகைம்மண்ணளவு கல்லாதுலகளவென்
றுற்றகலைமடந்தை யோதுகிறாள்-மெத்த
வெறும்பந்தயங்கூற வேண்டாம்புலவீர்
எறும்புந்தன்கையாலெண்சாண். (௩௩௬)

மாநிலங்காவலனவான் மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறு தன்னாற்றன்பரி -னத்தால்
ஊனமிகுபகைத்திறத்தாற் கள்வரானுயிர்தம்மால்
ஆனபயமைந்துந்தீர்த் தறங்காப்பனல்லனோ. (௩௩

கொடியமன்னவர்க்குக் குடிகளேயொன்னார் கோட்டை யேயமர்க்களமவர்த, மடிகடோய்நிலமெங் கணும்படுகுழி யா மயின்றிடுமன்னமும்விடமாம், நெடியவாசனமேகாசன மேடை நிமிருமைழயோர்நமன்றூதர், கடிமனைமயானக்காடெ னிற்கொடுங்கோற் காரணருய்யுமாறெவனே. (௩௩அ)

குணமிருந்தாலுங் குலமிருந்தாலுங் கொழுந்தமிழின்
மணமிருந்தாலு மதியிருந்தாலும் வழுத்தியவங்
கணமிருந்தாலு மொருகாசுபெறுதுசிங் காரவரைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலி பண்ணுவரே.(௩௩௯)

ஆவியனையாளையோர் பொழுதுபிரிந்தவளில்ல மணுகு காலை, மேவுபாங்கியைக்கண்டாண் டுணையின்றிவருந்தின ளோ மின்னுளென்றேன், நாவிதனுக்குண்டோகாண் மயிர்ப் பஞ்சமலப்பஞ்ச நாய்க்குமுண்டோ, தேவிதனக்குண்டோ வாண் பஞ்சமென்றுளதனபொருளைத் தெரிகிலேனே. ()

தையலில்லம்புகும்போதென் சுதன்குரலைக்கேட்டொ துங்கித் தாழ்வாரத்திற், பையவொன்றிச்செவிகொடுத்தேன் பாலனைப்பார்த்தக்கோதை பணமீயென்றான், ஐயனிறந்திடி லெல்லா முனதென்றனவன்றூங்கு மமயம்பார்த்தோர், சை யமெடுத்தவன்றலைமேற் போடுவாய்போடுமுன்னுன் றழுவே னென்றாள். (௩௪௧)

னென்றொருவூரின்பேரா முதலெழுத்தில்லாவிட்டால்
ஈனகர்மன்னன்பேரா நடுவெழுத்தில்லாவிட்டால்

கன்னபாரிருகத்தின்பேர் கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னியதேனின்பேரா மூரின்பேர்விளம்புவீரே. (மதுரை)

நாணியென்பதைநாரியென் றுரைத்திடுநகையால்
வேணுவானதுவளைந்து போய்ப்புகுந்ததுவென்றால்
காணலாவதோருருவமெய்ந் நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையரென்பதுபுதிதோ. (௩௪௩)

சீராடையற்ற வைரவன்வாகனஞ் சேரவந்து
பாராருநான்முகன வாகனந்தன்னை முனபற்றிக்கௌவி
நாராயணனுயர் வாகனமாயிற்று நம்மைமுகம்
பாரான்மைவாகனன் வந்தேவயிற்றினிற் பற்றினனே. ()

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக் குறும்பிய ளவாக்காதைக்குடைந்துதோண்டி, எட்டினமட்டறுப்பதற் கோவில்லியில்லை இரண்டொன்றாய்முடிந்துதலையிறங்கப்போ ட்டு, வெட்டுதற்குங் காகவியொட்டக்கூத்தனில்லை விளையாட் டாக்கவிதைதனைவிரைந்துபாடிக், கொட்டுதற்கோவறிவில்லா த்துறைகளுண்டு தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே. ()

ஆனையுரித்துமதட்டைப்போர்த்திட்டடியும்பட்டு
பானையிற்றங்கிரந்தேந்தி நிந்தமதுரைச்சொக்கர்
ஞானப்பெரியவராயவதெல்லாஞ் சொக்கநாயகியாள்
பானையெடுத்தமுகூர்த்தநிலைவந்தபாக்கியமே. (௩௪௬)

இருப்பைவிட்டாருர்சென்றுதாமுடை வருசெய் திருகை யுந்தசிக்கையுப்பவருந்திய, செருப்படிப்பின திறந்தமதனனை சுட்டதிருமுடிமேவ ரு டுமென்றியானை, மருப்பையுங்குயா

த்தலத்தையுஞ்சக்ர வாகத்தையும்வடகனகப், பொருப்பையு
ம்படைத்துத்தெளிந்தபின்படைத்தபுளகிதபூரணமுலையாள்.

அறந்திகழ்தவமுமகிலமுமிதனுலழியுமென்றயன்படை
த்திலனே, சிறந்தவேல்விழிபடைத்தயர்ந்து செங்க
ரஞ்சோர்ந்ததோதிகைத்து, மறந்ததோகரந்துவைத்ததோக
ளபவனமுலைப்பொறைசுமந்துருகி, இறந்ததோவுளதோவில
லையோவினிமேலெய்துமோவறியொணுதிடையே. (௩௪௮)

முகிலைவென்றலைக்கடிந்துசைவலத்தைமுனிந்துபொ
ற்கடுக்கையைமுடுக்கி, அகிலதும்புயுந்தகரமுப்புழுகு ம
ளஇடபனிமீதிலேந்து, பகலவாருடைந்தவளையிருல
வள்கிபாலமலர்த்தாமனிநவலீனு, டிரலசயந்தருதியிருடி
ண்டாவிந தெழுந்தனசெழுந்தடங்குழலாள். (௩௪௯)

பயிர்சழிந்தனவும்பட்டபாமாமும் பண்டைநாளுக்கவெ
ள்ளென்பும், உயிர்பெறப்பொருட்டிபளிதமும்பாலு மொழு
கியதேனுமாமுதுப், குயிலினிற்குாலுங்கிளியினின்மொழி
யுங்குழலும்யாழுங்குழைநிறைத்து, மயிலியற்சாயலவாவு
தறனக்குமலாயன்வகுந்ததெனமொழியாள். (௩௫௰)

கடவினைக்கயலைக்கணையைமென்பிணையைக் காவியைக்
கருவிளமலரை, வடுவினைப்பொழியமறலியைவரையை வாளை
வென்றறவுநீணடகன், சொடுவினைக்குடிகொண்டிருபுறத்தா
க்குமிழையுங்குழையையுந்தாக்கி, விடமெனக்கருப்புறறிப
துன்கை வேலினுங்கூரியவிழியாள். (௩௫௧)

சுணங்குபூத்தொருகாழ்ம்மணிவடங்கிடந்த துணையிளவ ணமுலைசுமந்து, வணங்கிநாடோறுந்தேய்ந்ததோபெருகும்வி ணப்பெனுங்கடலுளாழ்ந்ததுவோ, கணங்கொள்வண்டார்க்கு ங்கணைமதன்கண்ணே றெய்தலுங்கழிந்ததோவன்றி, யணங்க ரவல்குற்றேர்மிசைவதியு மனங்கனேவிடையறிகிலேமால். ()

அன்னமுமியற்றிய வறனும்விற்றவர்
கொன்னவன்மறையினூல் கூலிக்கீந்தவர்
முன்னகைசெய்துபின பலகமொழிந்தவர்
சொன்னவைவழுக்குநர் துறக்கமாள்வரோ. (௲௫௩)

இறைவனையமைச்சனு யிருந்துசெற்றவர்
கறவைகள்பருகுநீர்க் கயங்கடூர்த்தவர்
பொறைவனக்கிளிகளும் வளர்க்கும்பூவையுஞ்
சிறைபடுத்தவரெலாந் துயரிற்றீர்வரோ. (௲௫௪)

தேவருக்கெனவிரந் துன்னுந்தீயவர்
யாவருக்கும்படு நிந்தையேற்றுநர்
காவெனப்பிறர்வைத்த நிதியங்கைக்கொளும்
பாவமுற்செய்தவப் பழியொழிப்பரோ. (௲௫௫)

துன்பம்வேட்டலசூழ்வதுசூழுங்காலதுபோ
லின்பமென்பதுமுயனறுமுலாதுவந்தெய்து
முன்பராபரன்முடித்ததேமுடியுமென்றெண்ணி
யன்பராயத்தொழுமுயல்வதேமுயற்சியென்றறியார். (௲௫௬)

யாதுமீசனுக் கிடையலராயினுமிழிந்த
போதுவீழ்ந்ததுமயிர் செறிந்ததுவண்டுபொரும்பூத்

தாதுநாறிடாத துவிரியாததுசைவத்
தோதுதூய்மையில்லாததென் றேழையுமொழிப்பார். ()

கையசையாதெழுத்தோ ணாந்தன்றிக்கருதிடாது
பையவீரடிக்குநாப்ப ணோரடிப்பாரப்பேறுது
செய்யசூலகட்டின்முற்றிச் செல்கின்றசெல்வமாதர்
தொய்யடிநடையிற்சூழும் வலத்தினுர்முத்திசூழ்வார். ()

பூசையில்லாதானுண்டி புழுப்பிணம்புலையன்கட்டம்
மாசுளபாவமொக்கும் வாளினிற்றீயில்வீழ்ந்து
நாசமாவதுவேநன்று நற்குலம்பிறந்தானேனும்
தேசுளாரவனைத்திண்டிற் றரிசிக்கில்நினைக்கிற்பாவம். (௩௫௧)